# ஸ்ரீகுமர குருபரர்

புரட்டாசி 1 17—9—80

தொகுதி 2 பகுதி 12



உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

திருச்செந்தூர் ஸ்ரீ செந்திலாண்டவர் திருவுருவம்.

உ

சிவ சிவ

"அமர்நாத் யாத்திரை நினைவு திருவாரூர், ஸ்ரீ தியாகேசர் முசுகுந்தார்ச்சனை நிதி" முதற் பொருள் ரூ. 18,000/-

''நீரூர்ந்த முந்நீர் நிலவலய நீள்கொடிஞ்சித்
தேரூர்ந்த செல்வத் தியாகர்'' என்றும்,

''மல்லல்வளம் கனிந்தபுகழ்க் கமலேசர்
திருவுருவும் வாம பாகத்
தல்லமர்பைங் குழலுமையாள் திருவுருவும்
இருவருக்கும் அமுத மான
கொல்லயில்வேல் பசுங்குழலி திருவுருவும்''

பொருந்தியவர் என்றும்,

''பூம்பணை மருதத் திம்புனற் கமலைத்
திருநகர் புரக்கும் கருணையங் கடவுள்
அன்பெனும் மந்தரத் தாசைநாண் பிணித்து
வண்டுழாய் முகுந்தன் மதித்தனன் வருந்த
அருட்பெருங் கடலிற் றேன்றி விருப்பொடும்
இந்திரன் வேண்ட உம்பர்நாட் டெய்தி
அந்தமில் திருவொடும் அரசவற் குதவி
ஒருகோ லோச்சி இருநிலப் புரப்பான்
திசைதிசை யுருட்டும் திகிரியன் சென்ற
முசுகுந்த னுக்கு முன்னின் றருங்கு
பொன்னுல கிழிந்து புடவியில் தோன்றி
மன்னுயிர்க் கின்னருள் வழங்கும்''

என்றும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருவாரூர் நான்மணி மாலையில் பாடிய இருந்தாடழகராகிய வீதிவிடங்கப் பெருமான் எழுந்தருளிய தலமாயதும்,

''சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் – பேரான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்''

என்ற வெண்பாவில் கூறிய வண்ணம் ஏழுவிடங்கத் தலங்களில் ஒன்றாகியதும் ஆன திருவாரூரில், ஸ்ரீ தியாகராஜப் பெருமானுக்கு

ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் இரண்டாவது சோமவாரத்தில் முசுகுந்தார்ச்சனை செய்வித்தற்பொருட்டு இத்தருமம்திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் 60 ஆவது தருமமாக நிறுவப் பெற்றுள்ளது. இது ''அமர்நாத் யாத்திரை நினைவு திருவாரூர் ஸ்ரீதியாகேசர் முசுகுந்தார்ச்சனை நிதி'' எனப் பெயர் பெறும்.

2. அருள்மிகு செந்திலாண்டவன் திருவடுளை முன்னிட்டுக் காஷ்மீர் தேயத்திலுள்ள அமர்நாதுக்கு யாத்திரையாகச் சென்று 26-8-1980 ஆம் தேதி அமர்நாத் ஈசுவரரைத் தரிசனம் செய்து கொண்டமையை நினைவுகூர்தற் பொருட்டு இத்தருமம் அத்திப் புலியூர் திரு. எஸ். சுப்பையா முதலியார் விருப்பத்தின்படி நிறுவப் படலாயிற்று.

3. இராமேசுவரம் தருமத்தைச் சேர்ந்த நீலப்பாடி கிராம ஏஜென்டும், நமது காசிமடத்து மதிப்புக் காறுபாறும் ஆகிய அத்திப்புலியூர் திரு. எஸ். சுப்பையா முதலியார் அளித்த ரூ. 12,000/- (ரூபாய் பன்னிரண்டு ஆயிரம்), தற்காலம் நம் காசிமடத்தில் பணி புரியும் G. கணபதி முதலியார் அளித்த ரூபா ஓராயிரம், நம்மால் அளிக்கப்பெற்ற ரூ. 5000/- ஆக ரூ. 18,000/- (ரூபாய் பதினெட்டு ஆயிரம்) இத்தருமத்துக்குரிய முதற்பொருளாகும். இது பின்கண்ட வண்ணம் முதலீடு செய்யப் பெற்றுள்ளது.

திருவாரூர் ஸ்ரீ கமலாம்பிகா கோவாப்பரேட்டிவ் அர்பன் பாங்கு லிமிடெட்டில் 11%. வட்டிவரக் கூடியதாக 61 மாதங்களுக்கு ரூ. 12000/= உம் கும்பகோணம் சென்ட்ரல் கோவாப்பரேட்டிவ்பாங்கு லிமிடெட்டில் 10½%. வட்டிவரக்கூடியதாக திருவாரூர் கிளையில் 61 மாதங்கட்கு ரூ. 6000/= உம் ஆக கூடுதல் தொகை ரூ. 18,000/- (ரூபாய் பதினெட்டாயிரம்.) இத்தொகை நம் பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும். இது நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்று வரும்.

4. (அ) இம் முதற்பொருளின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையில் இத்தருமத்தை நிர்வகிப்பதற் குரிய நடைமுறைச்செலவு போக, எஞ்சிய தொகையைக்கொண்டு ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் இரண்டாவது சோமவாரத் தன்று திருவாரூர்த் தியாகராஜப்பெருமானுக்கு முசுகுந்தார்ச்சனை செய்விக்கப் பயன்படுத்தப்பெற்றுவரும்.

(ஆ) இம்முசுகுந்தார்ச்சனைக்கு ஆண்டு தோறும் ரூ. 1,300/- (ரூபாய் ஓராயிரத்து முன்னூறு) மட்டும் செலவு செய்யப்பெற்று வரும்.

(இ) பொருள்களின் கால விலைக்கு ஏற்பத் தயாரிக்கப் பெறும் திட்ட ஜாப்தாவின்படி இம்முசுகுந்தார்ச்சனை நடத்துவிக்கப் பெறும்.

5. மேலேகண்ட வண்ணம் முசுகுந்தார்ச்சனை நடத்திய பிறகு எஞ்சியுள்ள தொகையினின்று ஆண்டு தோறும் :-

(1) பங்குனி உத்தரத்தன்று திருவாரூர் ஸ்ரீதியாகராஜப் பெருமானுக்கு நடத்தப்பெற்று வ்டும் ருத்ரபாத அபிஷேகத்திற்கு நம் பங்காக ரூ. 300/- செலவு செய்யப்பெறும்.

(2) ஆவணி மாதம் பௌர்ணமியன்று திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தில் ஸ்ரீசொக்கலிங்கப்பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைக்காக ரூ.100/- செலவு செய்யப்பெறும்.

6. ஷை தருமங்களுக்குரிய தொகைகளை வட்டி வரவிற்கேற்பக் குறைக்கவும் கூட்டவும் பெறும். ஷை தொகைகள் செலவு செய்த பிறகு எஞ்சிய தொகை மூலதனத்தோடு சேர்க்கப்பெறும்.

7. மேற்கண்ட செலவினங்கட்கன்றி வேறு எம்முறையிலும் இவ்வட்டித்தொகை செலவு செய்யப்பெற மாட்டாது. இம்முதற் பொருள் திருப்பியளிக்கப்பெற்றதும் அதிக வட்டி வரக்கூடிய அரசியல் கடன்தாள்களிலோ, நீண்டகால முதலீடுகளிலோ முதலீடு செய்யப்பெற்று வரும்.

''தம்மேனி வெண்பொடியால் தண்ணளியால் ஆரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே; - அம்மேனி
மானே யமுனை;அந்த வாணிநதி யுங்குமரன்;
தானே குடைவேம் தனித்து''.

— திருவாரூர் நான்மணிமாலை.

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அமர்நாத் யாத்திரை செய்து

7—9—80 அன்று

திருப்பனந்தாளுக்கு எழுந்தருளியபோது

ஸ்ரீ காசிமடம் ஊழியர்கள்

# வழிபாடாற்றி அளித்த வரவேற்பு மலர்

கங்கையார் காசி தொட்டுக்
கவினார்ந்த குமரி மட்டும்
தங்கொளி ரறங்கள் நாட்டித்
தருவணம் புரத்தல் செய்யும்
செங்கையார் வளங்கொள் காசித்
திருமடம் அதிபர் நன்மை
பொங்கொளிர் காசி வாசி
புகழ்மலி குருவே போற்றி!

நீலங்கொள் மலர்கள் கொஞ்சும்
நிலத்தொழில் அமர நாதச்
சீலங்கொள் செல்வன் பாதம்
சீர்த்தியார் தமிழால் ஏத்திக்
காலங்கள் புகழ வல்ல
கவினடுள் தேங்கு ஞானக்
கோலங்கொள் தெய்வ சீல!
குருபதம் போற்றி! போற்றி

துன்னுநல் துறவின் வேந்தே!
தூயநற் றமிழோ டோங்கு
பன்னுநம் சைவம் மேன்மை
பதிந்திட நலம்பா லிக்கும்
மன்னவ! வண்மை ஞானம்
மகிழ்பக்தித் திறங்கள் மிக்க
நன்முத்துக் குமார சுவாமி
நாயக வருக! போற்றி!

# ஸ்ரீ குமரகுருபரர்

தெகுதி 2 புரட்டாசி பகுதி 12

## அமரநாதம்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் 13—8—80 முதல் 6—9—80 முடிய காஷ்மீர நாட்டு அமரநாத் யாத்திரை மேற்கொண்டருளிய சிறப்பைக் கருதி இந்த இதழில் 'அமரநாத்' பற்றிய குறிப்புக்களடங்கிய சிறு கட்டுரை ஒன்று வெளிவந்துள்ளது.

பண்டார மும்மணிக்கோவை பத்தாம் பாடலுக்கு இனிய விளக்கத்தை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருளியிருக்கிறார்கள். செல்வம் மனிதனை ஆளுகிறதா? மனிதன் செல்வத்தை ஆளுகிறானா? என்ற நீண்ட நெடிய சிந்தனைக்கு விடையருளியுள்ளார்கள்.

அறிஞர் திரு. மு. அ. அவர்களின் கந்தர் கலிவெண்பாவுள் சமயம் என்னும் தொடர்க்கட்டுரையும், வித்துவான் திரு. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் செய்த திருவிளையாடற்புராணம் உரைநடை மதுரைக் காண்டம் பகுதியும் இந்த இதழுடன் நிறைவு பெறுகின்றன. திருவிளையாடற் புராணம் உரைநடை-1. மதுரைக் காண்டம்-தனி நூலாகவும் தயாராகிறது. விரைவில் விற்பனைக்குக் கிடைக்கும்.

இறைவனின் அருளாடல்கள் எங்கும் நிகழ்ந்த அருமையை விடையரங்கத்துள் அறிஞர் பெருமக்களின் அரிய விடைகளால் உணர்ந்து இன்புறலாம்.

திருவாரூர் நான்மணிமாலை 10 ஆம் பாடல் 'பெருமான் தமிழ்க் கமலை' எனத் தொடங்குவது. இதனைத் திரு. கி.வா.ஜ. அவர்கள் அரிய விளக்கத்துடன் ஓர் இலக்கிய நாடகமாகவே படைத்தளித்துள்ளார்கள்.

டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கையா அவர்கள் 'விழிகள் கண்டன' என்ற தலைப்பில் ஓர் அரிய கட்டுரை அளித்துள்ளார்கள். அதில் கந்தபுரி வளர் இளம் குமரனின் சீர்த்தியுடன் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்களின் கவிதை வளத்தையும் தெளிவு செய்கிறார்கள்.

நெல்லை சிவமணி புலவர் திரு. ம. சிவசம்பு அவர்கள் 'பாம்பாட்டி' என்று ஒரு கட்டுரை நல்கியுள்ளார்கள். சிறுகதை ஒன்றைப் படிப்பது போலவே இருக்கிறது.

திருக்கணித பஞ்சாங்கம், இறக்குமதி, ஏற்றுமதி, அந்தாதி, இருபா இருபஃது முதலிய அம்சங்களும் வழக்கம்போல இதழுக்கு அணி செய்கின்றன.

---

இந்த இதழுடன் ஸ்ரீ குமரகுருபரர் திங்களிதழுக்கு இரண்டாண்டு நிறைவு பெறுகிறது. பலரின் சந்தாக்கள் முடிவடைகின்றன. வழக்கம் போல சந்தாக்களைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறேன். மேலும் பல சந்தா தாரர்களை இதழுக்கு அறிமுகம் செய்து வைக்கவும் வேண்டுகிறேன்.

— தி. ஆ-ர்.

# அமரநாத்

இது காஷ்மீர் நாட்டில் உள்ள ஒரு சிவத்தலம். தமிழ் நாட்டில் இருந்து மூவாயிரத்து ஐந்நூறு கிலோ மீட்டர்களுக்கு அப்பால் உள்ளது. இமயமலையின் நடுவில் இறைவன் காட்சி தரும் மாட்சியே அமரநாதம். அமராவதி நதியின் உற்பத்தியிடம் அமரநாதம். கடல் மட்டத்தில் இருந்து பதின்மூன்றுயிரம் அடி உயரத்தில் அமரநாதன் அப்பு லிங்கமாகக் காட்சி தருகிறுன். பனிக்கட்டி உறைந்து இலிங்கத் திருமேனியாக வளர்ந்து இவ் விறைக்காட்சி வழங்குவது அற்புதமாகும். வளர் பிறையில் ஒவ்வொரு நாளும் வளர்ந்து, தேய் பிறையில் ஒவ்வொரு நாளும் இவ் விலிங்கத் திருமேனி தேய்ந்து அமாவாசையன்று அருவத் திரு: மேனியாகும். ஆண்டுக்கு ஒரே ஒரு முறை ஆவணிமாதம் இந்தத் தெரிசனம் கிடைக்கும். மற்ற காலங்களில் அங்குச் செல்ல இயலாது. பாஹல்காமிலிருந்து குதிரைகளிலும் நடந்தும் செல்ல வேண்டிய அனுபவமும் அளிக்கும் யாத்திரையே அமரநாத யாத்திரை. கங்கண விழா எனப் படும் ஆவணி அவிட்டத்தன்றும் ஆவணிப் பௌர்ணமியன்றும் பல்லாயிரக்கணக்கானேர் அரிதின் முயன்று இந்த யாத்திரை செய்து வழிபாடு செய்கின்றனர்.



பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்



# அருள் பழுத்த கனிச்சுவை

இது ஓர் அற்புதமான சிந்தனை. இதைப்பற்றி இது வரை யார் கவலைப்பட்டார்கள், யார்யோசித்தார்கள்?

செல்வத்திற்கு மதிப்பதிகம் என்றுதான் பெரும்பாலு மாக எல்லோருமே நினைக்கிறார்கள், சொல்கிறார்கள்! எது வரையில் என்பதை யாருமே சிந்திப்பதில்லை.

வீடு, நிலம், மாடு, மனை, அணி, மணி, பொன் பொருள் - இத்யாதி இத்யாதி செல்வங்களை எல்லாம் சேர்க்கவேண்டும் என்று மனித மனம் ஆதங்கப்படுகிறது; பிரயாசை எடுக்கிறது. தன்னைத் தாழ்த்திக் கொண்டாவது சிலர் அவற்றை அடைகிறார்கள். அதற்குப் பிறகு செல் வத்தின் கதி என்ன? இதனைத்தான் நாம் சிந்திக்க வேண்டும். இதன் பிறகு செல்வத்தை மனிதன் ஆளுகி றானா? மனிதனைச் செல்வம் ஆளுகிறதா? இது ஒரு நீண்ட நெடுஞ் சிந்தனைக்குரிய வினா.

செல்வத்தைப் பெறும் வரை மனிதன் அஞ்சுகிறான்; கொஞ்சுகிறான்; கெஞ்சுகிறான். பெற்றபிறகு ஆளத் தொடங்குகிறான்! எதை எதை? எந்தச் செல்வத்திற்காகப் பாடுபட்டானோ, அதையும் சேர்த்து ஆளத் தொடங்கு கிறான்! நாம் செல்வத்தைப் பார்த்துப் பரிதாபப்படு கிறோம்! 'உன் மதிப்பு' இவ்வளதானா என்று!

செல்வத்தின் பலஹீனம் நமக்குப் புரிகிறது. பாவம். அது ஆளும் திறம் பெற்றதன்று; ஆளப்படுவது! ஆனால் ஒன்று. ஆளப்படும் போதும் செல்வத்தின் கௌரவம் குறைவதில்லை. அது பொருட்படுத்தப்படுகிறது, பொருளாக மதிக்கப்படுகிறது. என்ன கௌரவம் இருந்தாலும் மனிதனின் மேலாதிக்கத்திற்குட்பட்டது, மனிதனின் ஏவல் கூவல் கேட்பதுதானே இந்தச் செல்வம்!

''எனக்காகத் தானே நீ பாடுபட்டாய்; ஏ! மனிதா எவ்வளவு மாறிவிட்டாய்; நீ என்னை ஆளுகிறாயா'' என்று கேட்கும் திராணியற்றவை இந்த அணி மணிகள்; செல்வங்கள். கொண்டவரைக் கொண்டாள்வதுண்டா இந்த அணிமணிகள்?

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்கள் இந்த அற்புதமான சிந்தனையையும் தீர்ப்பையும் பண்டார மும்மணிக் கோவை பத்தாம் பாடலுள் வைத்தருளியுள்ளார்கள். அப்பாடற்பகுதி இதோ:-

மணி, கொண் டவர்தம் பொருள் ஆவதுஅன்றி, அம்
மா,மணியாம்
அணி, கொண்டவரைக் கொண்டு ஆள்வது உண்டே?

[கொண்டவர் - செல்வர்; பொருள் - மதிப்புடையது; மா - பெரிய; அணி - அழகு; கொண்டாள்வது - ஆட்சி செய்வது; ஏகாரம் வினாப்பொருளின் வந்ததேனும் 'இல்லை' என்னும் விடை தருவதாகும்.]

கொண்டாள்வதுண்டே என்பதில் செல்வநிலையாமை பற்றிய ஏளனக் குறிப்பு அங்கதச் சுவையுடன் வெளிப்பட்டுவருகிறது. பெற்றவர் என்ற சொல்லால் செல்வரைக் குறிக்காமல் 'கொண்டவர்' என்ற சொல்லால் செல்வரைக் குறிப்பதில் ஓர் அழகு இருக்கிறது. கொள்ளுதல்

என்பது இனித் தேவையில்லை என்னுமளவுக்குப் பெறுதல். 'செல்வத்தை மனிதன் ஆளத் தொடங்குவதும் நிறைவு உள்ள காலத்தில்தான். 'ஆசைக்கு அளவில்லை' 'செல்வத்தில் நிறைவு வருமா' என்று கேட்கலாம். வராதுதான். என்றாலும் ஓர் எல்லை இருக்கிறதல்லவா? அந்த எல்லையை எட்டிய செல்வனைக் 'கொண்டான்' என்ற வார்த்தையால் குறிக்கவேண்டும்.

அணிமணிகளின் அநித்யத்தையும், செயலற்ற தன்மை யையும் சுட்டிக் காட்டிய சுவாமிகள் இன்னொரு மணியை நாமுய்ய அறிமுகப்படுத்துகிறார். இப்பொழுது அறிமுகப் படுத்தப்படும் மணி மாசு இல்லாத மணி, குருமணி!

இம்மணியைப் பார்த்தவுடனே - இதனை நாம் விரும்பிப் பற்றிக் கொள்ளத் தொடங்கும் போதே இது நம்மை ஆட்கொள்கிறது! நம் ஆதிக்கத்திற்கு இது உட்படாது; இதன் அருளாதிக்கத்திற்கு நாம் உட்படுகிறோம், எனவே இதனை நாம் ஏசுவதில்லை. இதன் ஏவல் கூவல்களைக் கேட்டு நாம் தொண்டு புரிகிறோம். நம் தொண்டுகளை ஏற்றுக் கொள்ளுகிறது; நம்மை ஆளுகிறது!

இது எந்த மணி? குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணி!

இப்படி நம் குருநாதனின் பெருமை கூறிய பகுதியில் இன்னொரு பெருமையையும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சொல்லிக் காட்டுகிறார்.

சிவபெருமானே நீலகண்டத்தை மறைத்து மாசிலா மணியாக இங்கெழுந்தருளியுள்ளார் என இந்நூலின் ஐந்தாம் பாடலுள்,

'காசுலா மலினம் கரந்தகா ரணத்தால்
மாசிலா மணியென வண்பெயர் நிறீஇ'

எனக் கூறிய சுவாமிகள் கறைக் கண்டத்தை மறைத்து அவதரித்த பெருமான் கொன்றை மலர் மாலையை மறைக் காமலேயே அவதாரத்திலும் விளங்குகிறார் என்று அறி விக்கிறார்கள்.

இந்த மணி அற்புத மணிதான்!

இது மதுரையில் வைகும் சொக்கநாதமணியே ஆகும்! இந்த மணியை அடைய வேண்டும் எனப் பக்தியுடன் நினைக்கும் நினைப்பொன்றே போதும்; இதன் ஆளுகைக்கு உட்படும் பாக்கியத்தை அளிக்கும்! பாடலின் முழுவடி வத்தைப் பார்ப்போம்:-

மணி, கொண்டவர் தம்பொருள் ஆவது
அன்றி, அம்மா மணியாம்
அணி, கொண் டவரைக் கொண் டாள்வதுஉண்
டே? அருள் கூடல் வைகும்
கணிகொண்ட கொன்றைத் தொடமாசி
லா, மணி கண்டவுடன்
பணிகொண்டு தொண்டும்கொண்டு ஆளும்;கொள்
வோம்என்று பார்க்க முன்னே

[கூடல் - மதுரை; கணி - கண்ணி; தொடை - மாலை; கண்டவுடன் - தெரிசித்த உடன்; பணி - ஏவல்; தொண்டு - கடமை]

— சிவ சிவ

---

உத்தர சுவாமிமலை

டெல்லி உத்தரசுவாமிமலை நூதன திருப்பணிகளுக்குக் காணிக்கைகள் அனுப்பவேண்டிய முகவரி:—

செயலர், ஸ்ரீ சுவாமிநாதசுவாமி சிவசமாஜம்,
இராமகிருஷ்ணபுரம், புது-டெல்லி.

## 23. டௌவுடன் (பரப்பிரம்மத்துடன்) இணைத்துக் கருதப்படுதல்

### தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

இயற்கை சில சொற்களே பேசும்:
அக்காரணத்தால் தான் புயல் காற்று முற்பகல் முழுதும் வீசுவதில்லை.
பேய் மழை ஒரு நாள் முழுவதும் தொடர்ந்து பெய்வதில்லை.
அவை எங்கிருந்து வருகின்றன?
இயற்கையிலிருந்து.
இயற்கையும் கூட நெடுங்காலம் நீடிப்பதில்லை (அதன் பேச்சை)
அப்படியானால் இன்னும் எவ்வளவு குறைவாக
மானிடர்கள் பேசவேண்டும்? [1]
ஆகையால்தான்:
டௌவைப் பின் பற்றுபவன் டௌவுடன் இணைத்துப் பேசப்படுகிறான்.[2]
பண்பாட்டைப் பின் பற்றுபவன் பண்பாட்டுடன் இணைத்துப் பேசப்படுகிறான்.
டௌவைக்கைவிட்டவன் (டௌவைக்) கைவிடுதலுடன் இணைத்துப் பேசப்படுகிறான்.
எவன் டௌவுடன் இணைத்துக் கருதப்படுகின்றானோ
டௌ அவனை வரவேற்க விழைகின்றது.
எவன் பண்பாட்டுடன் இணைத்துக் கருதப்படுகின்றானோ
அவனை வரவேற்க பண்பாடும் விழைகின்றது.
எவன் கைவிடுதலுடன் இணைத்துப் பேசப்படுகின்றானோ
கைவிடுதலும் அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்க விழைகின்றது.
எவனுக்கு போதுமான பற்று[3] இல்லையோ
அவன் மற்றவர்களிடமிருந்து பற்றைப்
பெற முடியாது

---

1. சீன மொழியிலிருந்து ஆங்கிலத்தில் இப்பாடல்களை மொழி பெயர்த்தலின்யுடான் என்பவர் கூறுகிறார், இப்பத்தியை அடுத்த பாட்டின் முதல் இரண்டு வரிகளுடன் சேர்த்துப் படித்தால்இதன் பொருள் மேலும் நன்றாகப்புரியும். அவையாவன: "எவனொருவன் தன் காலின் பெருவிரலில் நிற்கின்றானோ அவனால் நிலையாக நிற்க முடியாது; எவனொருவன் வலிந்து எட்டி எட்டி அடி வைத்து நடக்கின்றானோ அவன் நன்றாக நடப்பதில்லை."

## 24. நற்பண்பின் வண்டலும், கழிசடைகளும், கரளைகளும்.

எவனொருவன் தன் காலின் பெருவிரலில் நிற்கின்றானோ அவன்
நிலைபெற்று நிற்பதில்லை;
எவனொருவன் வலிந்து எட்டி எட்டி அடி வைக்கின்றானோ
அவன் நன்றாக நடப்பதில்லை;
எவனொருவன் தன்னைக் (யார் என்று) காட்டிக் கொள்கின்றானோ
அவன் (பொலிவு) தேஜஸ் உடையவனாயிருப்பதில்லை;
எவனொருவன் காரண காரியம் காட்டி தான் செய்தது சரி
யென்று
நிரூபிக்கின்றானோ அவன் பரந்த புகழுடையவன்
அல்லன்;
எவனொருவன் தான் செய்த செயல்களைக் கூறி மார்தட்டிகொள்
கின்றானோ அவனை யாரும் நம்புவதில்லை;
எவனொருவன் பெருமைப் பட்டுக் கொள்கிறானோ
அவன் மனிதர்களில் தலைசிறந்தவனல்லன்;
இவை அனைத்தும் டௌவின் கண்களில்
''நற்பண்புகளில் கசடும் கரளைகளுமாகப் படுகின்றன''
இவை அருவருக்கத்தக்கவை.
ஆகையால் டௌவை அண்டிய மனிதன் இவற்றைக்
காலால் எற்றி வீசுகிறான்.

---

உ

சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

A String of Verses on Chidambaram

By Kumaragurupara Swamigal

Translated into English by K. M. Venkataramiah.

63. அடிகொண்ட குனிப்பன்றே அரிபிரமர் முதலானோர்
முடிகொண்ட தலைவணக்கின் குனிப்பெல்லாம் முறைமுறைபோய்
கடிகொண்ட பொழில்தில்லை நடராசன் கழற்காலில்
குடிகொண்ட படி போலும் இடத்தாளில் குஞ்சிதமே.

It is the Dance of the feet that makes
Vishnu Brahma and others
bow down their crowned heads;
They go one by one,
Before Nataraja of Thillai surrounded by fragrant groves,
And seem to rest at His feet adorned with anklets;
His left foot is upraised and bent.

64. மல்லாண்ட திரள்திண்தோள் துழாய் முதலும் மணி நாவில்
சொல்லாண்ட மறைமுதலும் பலராங்குத் தொலைவெய்த
பல்லாண்டு செலச் செல்லா இளையோரும் பனிப்(பு) எய்த
அல்லாண்ட நள்ளிருளில் அழலாடும் தொழிலினையே.

Vishnu with robust shoulders wearing the garland of Thuzai
Brahma as Lord of Vedas chanting them, -

And many others becoming extinct, -
Many years might have passed,
yet the youthful sages to become agitated -
At dead of night in the intense darkness,
You dance with fire in your hand !

அதனால்,

பல்பே ருழி செல்லினும் அடிகட்(கு)
ஒல்லையும் செல்லா தாகும் ஆகலின்
அளவில் காலம் அலக்கணுற்(று) உழலும் என்
தளர்வு நோக்காய் போலும் நோக்கின்
கருணைசெய் தருளாய் அல்லை
அருள் புலம் பழுத்த ஆடல்வல் லோயே!

Therefore,

Though many deluges might have passed,
(For Him)
It may not equal a moment;
Hence,
I suffer for a Limitless time,
But you do not behold my suffering;
Should you consider it
You will not but bestow grace,
Oh gracious Lord well up at dance !

# அவா அடங்காது

கி. வா. ஜகந்நாதன்

அந்தப் பெண் திருவாரூரில் வாழ்பவள். தியாகேசப் பெருமானைத் தரிசித்து அவனுடைய வடிவழகில் ஈடுபட்டாள். அவனிடம் காதல் கொண்டாள். அந்தக் காதல் மேலும் மேலும் பெருகிக் கொண்டே வந்தது. எப்போதும் அந்தப் பெருமானையே நினைத்துக் கொண்டு இருந்தாள். உணவிலும் உறக்கத்திலும் அவள் மனம் செல்லவில்லை.

அவளுடைய தோழி அவளிடம் உண்டான வேறுபாடுகளைக் கவனித்தாள். அவள் உடல் மெலிந்து வருவதைக் கண்டாள். அதன் காரணம் அவளுக்குத் தெரியவில்லை. அந்தப் பெண்ணையே, ''ஏன் இவ்வாறு இளைத்து வருகிறாய்?'' என்று கேட்டாள். அந்த இளம் பெண்ணும் தோழியும் நெருங்கிப் பழகுகிறவர்கள். அதனால் தன் உள்ளத்தை ஒளிக்காமல் சொல்லத்தொடங்கினாள்.

''என் உடம்பு இளைக்கிறதைத் தான் நீ பார்க்கிறாய்; என் உள்ளம் பொருத்து வருவதை நீ அறியவில்லையே''.

தோழி: உள்ளம் பெருப்பதாவது? உடம்புதான் உணவுண்பதால் பெருக்கும். உள்ளம் எப்படிப் பெருக்கும்?

பெண்: அது அவாவினாலே பெருக்கிறது.

தோழி: அவாவா? ஆசையையா சொல்கிறாய்? உனக்கு என்ன குறை வந்து விட்டது? உன் தாய் தந்தையர் உன்னை அருமையாகப் போற்றி வருகிறார்களே? உன் ஆசை இன்னதென்று தெரிந்தால் அந்தப் பொருளை வாங்கித் தருவார்களே!

பெண்: அவர்களால் வாங்கித் தரும் பொருள் அன்று அது.

தோழி: அப்படி என்ன பொருள் இருக்கிறது ?

பெண்: சொல்கிறேன் கேள். நீ தியாகராசப் பெருமானைந் தரிசித்திருக்கிறாயா?

தோழி: திருவாரூரில் இருந்து தியாகேசரைத் தரிசிக்காமல் இருப்பேனா?

பெண்: கமலையாகிய இங்கே தமிழ்க் கவிஞர் இருக்கின்றார். அவர்களால் பாடப் பெற்றவன் அப்பெருமான். வேறு ஊர்களி லிருந்தும் வந்து புலவர்கள் பாடி யிருக்கிறார்கள். மூவருமே தேவா ரப் பாடல்களை அருளியிருக் கிறார்களே!

தோழி: இவற்றையெல்லாம் எதற்காகச் சொல்கிறாய்?

பெண்: பெருமானாகிய அவன் இந்தத் தமிழ் வளரும் கமலையில் எழுந்தருளியிருக்கிறான். அவன் புகழ் விரிந்தது. அவனைப் பற்றிய பாக்களைப் படிக்கும் போதெல் லாம் என் உள்ளம் அவனுடைய பேரழகில் ஈடுபடுகிறது.

தோழி: நீ பக்தையாகையால் அவ்வாறு ஈடுபடுகிறாய். அதனால் உன் உடம்பு இளைப்பானேன்?

பெண்: நான் வெறும் பக்தை மட்டும் அல்ல, நான் அவன்பால் காதலே கொண்டிருக்கிறேன்.

தோழி: அவனிடம் அப்படி எதைக் கண்டு விட்டாய்?

பெண்: எதையென்று சொல் வேன்; அவன்திருக்கரத்தில்மானை ஏந்தியிருக்கிறான்; அவன் அதைப் பிடித்திருப்பதே தனியழகாக இருக்கிறது.

தோழி: அந்த மானைக் கண்டா உனக்குக் காதல் பிறந்தது?

பெண்: முதலில் மானைத்தான் பார்த்தேன். நாம் மான் வளர்க் கிறோம் அல்லவா? அந்தப்பழக்கந் தான். அந்த மானின் மேல் என் கண் ஓடியது. பிறகு அதை ஏந்திய அவன்திருக்கரத்தைப்பார்த்தேன் அதன்பிறகு அவன்திருவுருவத்தை ஊன்றிப்பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் என்னை உந்தியது.

பெருமான் தமிழ்க்கமலைப்
பெம்மான் கைம் மானும்.

தோழி: பிறகு?

பெண்: அவன் திருமேனியிலே என் கண் சென்றது. அவன் யானைத்தோலைப் போர்த்திருக்கி றான். கரிய நிறம் கொண்ட அத னிடையே அவன் திருமேனி தெரிந்தது. ஆ! செவ்வண்ண முடைய அந்த மேனியின் அழகு தான் என்னே!

தோழி: யானைத் தோல் போர் வையைக் கண்டா மகிழ்ந்தாய்?

பெண்: யானைத்தோல் முற்றும் மூடியிருக்கவில்லை. அங்கங்கே இடைவெளியில் அவன் திருமேனி தெரிந்தது. இப்படி மூடியிருக்கும் போது அந்த வண்ணம் கண்ணைக் கவர்கிறதே? மூடாமல் முழு மேனியையும் காட்டியிருந்தால் அங்கேயே மயங்கி விழுந்திருப் பேன்.

கருமான் உரி அதளும்,

தோழி: அப்பால் என்ன கண் டாய்?

பெண்: அப்புறம் என்பார்வை யை இறக்கிப்பார்த்தேன். அவன்

தன் இடையில் கச்சு அணிந்திருந்தான். அங்கே சிலநேரம் கண்ணும் கருத்தும் பதிந்தன.

கச்சும்.

தோழி : அந்தத் தோலாண்டியையா நீ விரும்புகிறுய் ? பெண்கள் மனத்தைக் கவர்வதற்கு அவனிடம் என்ன இருக்கிறது? அவனே எந்தப் பெண்ணுவது விரும்புவார்களா ?

பெண் : என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்? பரமேசுவரியாகிய மான் போன்ற உமாதேவியே அவனே விரும்பி எப்போதும் உடன் இருக்கிருளே ! அந்தப் பேரழகியே ஆசைப்படும் கணவன் அவன் என்ருல் அவன் பெருமை எத்தகையதாக இருக்க வேண்டும்.

ஒரு மானும்.

தோழி : இவ்வளவு தூரம் ஊன்றிக் கவனித்தாயே ! அவனிடமே ஏதாவதுசொல்வதுதானே?

பெண் : யாரிடமாவது சொல்லியனுப்பி என்காதலே இரகசியமாக அவன் காதில் போடச் செய்யலாம் என்று நினைத்தேன். இந்த நினைப்பு வந்தவுடன் அவன் காதைப் பார்த்தேன். அவன் எல்லாரும் அணிகின்ற அணிகலன்களை அணியாமல் சங்காலான குழையைத் தரித்திருக்கிருன். அந்தக் காதுதான் எவ்வளவு அழகாக விசாலமாக இருக்கிறது!

சங்கத் தடங்காதும்

தோழி : காதுக்கு அப்புறம் கண்ணேப் பார்த்தாயோ ?

பெண் : அவன் கண்ணேச் சந்திக்க என் கண்களுக்கு நாணமாக இருந்தது. ஆகவே என் மனத்தில் அவனேத் தழுவிக் கொள்ள வேண்டும் என்றஆசை எழுந்தது. உடனே என் கண் அவனுடைய மாலேயை அணிந்த திருமார்பில் உலாவத் தொடங்கியது.

தார் மார்பும்.

தோழி: மார்புக்குப்பின்எதைப் பார்த்தாய்?

பெண் : வெப்பத்திஞல் துன்புற்றவன் குளத்தங்கரைக்குவந்து படி முதலியவற்றைப் பார்த்த பிறகு அந்தக் குளத்தில் படிந்து நீராடுவதுபோல என் கண்ணும் மனமும் அவன் திருமார்பிலே சொக்கிப்போய் நின்று விட்டன.

தோழி : உன்னுடை காதலே அடக்கிக் கொள்ள வேண்டும். பிறருக்குத் தெரிந்தால் பரிகாசம் செய்வார்கள்.

பெண் : நானும் அடக்கி அடக்கிப் பார்க்கிறேன். அவனே மறுபடியும் காணும் போது அந்த அவா என் மனத்தளவில் அடங்காது பொங்கி எழுகின்றதே; நான் என் செய்வேன்

கண்டக்கால்
அங்கத்து அடங்காது அவா.

தோழியிடம் இவ்வாறு கூறுவதற்குக் காரணம் அவள் தன்னையும் தியாகப் பெருமானை தம் இணைப்பதற்கு வழி கோலுவாள் என்ற விருப்பமே ஆகும்.

பெருமான் தமிழக்கமலைப்
பெம்மான்கைம் மானும்
கருமான் உரிஅதளும்
கச்சும் - ஒருமானும்
சங்கத் தடங்காதும்
தார்மார்பும் கண்டக்கால்
அங்கத்து அடங்காது
அவா.

தோழி: மிக்க பெருமையுடையவனும் தமிழ்வளம் நிரம்பிய திருவாரூரில் உள்ள தலைவனுமாகிய தியாகேசனுடைய திருக்கரத்தில் உள்ள மானையும் யானையை உரித்த தோலாகிய போர்வையையும், இடையிலே அணிந்த கச்சையும், அருகில் அமர்ந்திருக்கும் ஒப்பற்ற மானைப் போன்ற உமா தேவியையும் சங்காலாகிய குழையை அணிந்த விசாலமான திருச்செவியையும் மாலையை அணிந்த மார்பையும் கண்டால், அவனை அடைய வேண்டும் என்ற ஆசை தோன்றி என் மனத்துக்குள் அடங்காமல் பெருகி பொங்குகிறது.

தியாகப்பெருமானைத் தரிசித்துக் காதல் கொண்ட மங்கை ஒருத்தி தன் தோழிக்குக் கூறும் கூற்றுக அமைந்தது இந்தப்பாட்டு. கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம் என்ற புறத்துறைப்பாட்டு இது.

தோழி என்ற விளியைமுன்னத்தால் வருவித்துக் கொள்ள வேண்டும். தமிழ்க் கமலை—தமிழ் நூல்களால் பாராட்டப் பெறும் திருவாரூர்; திருவாரூருக்குத் தலபுராணமும் பல பிரபந்தங்களும் உள்ளன. திருத்தொண்டத் தொகை இந்தத் தலத்தில் தோன்றியது. சிவ பெருமானே, "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தர மூர்த்திநாயனர் திருத்தொண்டத் தொகையைப் பாடினர். அதன் முதற்பாட்டின் அரையடி தியாகப் பெருமான் திருவாக்கு ஆதலின் தமிழைப் பாடிய பெருமான் என்றும் பொருள் கொள்ள இடம் உண்டு. கைம்மான்-சிவபிரானது இடக் கையில் விளங்கும். கச்சு, மான் என்பது விலங்குப் பொதுப் பெயராகவும் வரும். கருமான் என்று அடையடுத்து வந்து யானையைக் குறித்தது. கருமானை உரித்த அதளும். அதள்-தோல், கச்சு, இடையில் அணிவது. ஒரு மான்-ஒப்பற்ற உமாதேவியார்; மான் உவம ஆகுபெயர். சங்கம் என்றது அதனால் ஆன குழைக்கு ஆயிற்று; காரண ஆகுபெயர். தடங்காது: வார்காதாதலின் இவ்வாறு

சொன்னர். தார்-மார்பில் அணியும் மாலே; அதுகொன்றைமாலே. கண்டக்கால் — கண்டால், ஒரு சொல். அங்கத்து மனத்தில் அவா அவனைத்தழுவ வேண்டும் என்ற ஆசை. காதல் முறுகி அவாவாயிற்று. அதனல் உண்டான வேறுபாடுசள் தோழிக்குப் புலனயின; அவள் கேட்க அவளுக்குச் சொல்கிருள் காதலி.

கைம்மானும், அதளும், கச்சும், ஒரு மானும், காதும், மார்பும் கண்டக்கால் அவா அடங்காது என்று முடிக்க.

இதில் பின்இரண்டடிகள் திரிபு; ஐந்து மான்கள் வந்தன.

''கையடைந்த மழுமானும் உழைமானும் கயலும் மானும், மையடைந்த விழிமானும் உடனக அருணேசர் வருகுவாரே'' அருணேக்கலம்பகம் 85 என்றபாட்டிலும் பல மான்கள் வந்தன.

திருவாரூர் நான்மணி மாலேயில் வரும் பத்தாவது பாட்டு இது.



## இதமான வாழ்வுக்கு எளியவழிகள்.

(அ) லெட்சுமி கடாட்சம் உண்டாக.

பனங்கோரை, பெருங்கோரை என்கிற குறட்டை மூலிகை இவைகளே ஆவின் பாலில் சேர்த்து அரைத்து, தலேயிலும் உடலிலும் தேய்த்து ஸ்நானம் செய்து வந்தால் லெட்சுமி கடாட்சம் உண்டாகி நரை, திரை மாறும்.

(ஆ) தலேவலி நீங்க.

கிச்சிலிக்கிழங்கைப் பொடிசெய்து, நல்லெண்ணெயிற் கலந்து, காய்ச்சி, தலேயில் தேய்த்து முழுகி வந்தால் தலேவலி, சிதளம் இவைகள் நீங்கி, தேகம் நறுமணம் வீசும். நல்நிலேயும் பெறும்.

(இ) இரத்த சுத்திக்கு

நன்னரி வேரைச்சிறு துண்டுகளாக்கிக்கஷாயம் (கியாழம்)செய்து தினம் 3வேளே உட்கொண்டால் இரத்தம் சுத்தமாகி, தோல் சம்பந்தமான வியாதிகளும் நீங்கிக் குணமாகும்.

— டாக்டர். N. சடையப்பன்.

# பாம்பாட்டி

நெல்லை. சிவமணி புலவர். ம. சிவசம்பு பி. லிட்.,

தெருவில் ஒரே கூட்டம். ஒரு பாம்பாட்டி பாம்புகளை வைத்து ஆட்டிக் கொண்டிருந்தான். பாம்பாட்டி ஊதும் மகுடிக்கு ஏற்பப் பாம்புகள் ஆடிக் கொண்டிருந்தன. அவன் கூட்டத்தில் காசுகளைப் பெற்றுக் கொண்டிருந்தான். நானும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். இது என்ன வேடிக்கை? இதை விடப் பெரிய வேடிக்கை ஒன்று தெரியுமோ உங்களுக்கு, பாம்பு ஒன்று பாம்பாட்டியை ஆட்டுவிக்கிறது. பாம்புக்காக பாம்பாட்டி ஆடுகிறான். அப்பாம்பாட்டியும் சாதாரண பாம்பாட்டியா? இல்லை. பெரிய கெட்டிக்காரன். ஒரு பாம்பையா ஆட்டுவிக்கிறான். ஐந்து பாம்புகளை ஒரே நேரத்தில் ஆட்டுவிப்பவன்; அடக்குவிப்பவன். அப்பேர்ப்பட்ட பாம்பாட்டி, பாம்பு ஆட்விக்க ஆடுகின்றான். இது எங்கே நடக்கிறது என்று கேட்கிறீர்களா? அதுவும் பொது மன்றத்தில் தான். தில்லையில்தான் நடக்கிறது.

மனத்தைப் பலவழிகளில் ஓடச் செய்யும் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய இந்திரியப் பாம்புகளை ஆட்டுவிக்கும் பாம்பாட்டிச் சித்தர் நம் சிதம்பரநாதன். அச் சிதம்பரநாதனை தில்லைக் கூத்தனை ஒரு பாம்பு ஆட்டுகிறது. அப்பாம்புக்காக அவனும் ஆடுகிறான். பக்தர்கள் எல்லோரும் வேடிக்கை பார்க்கின்றனர். பாம்பாட்டியை ஆட்டும் பாம்பு யார் தெரியுமா? பாம்புக்காலோடு கூடிய பதஞ்சலி முனிவர்தான். பதஞ்சலி முனிவர் பொருட்டு நடராசப் பெருமான் தில்லை மன்றுள் ஆடிக் கொண்டிருக்கிறான். அவரும் பார்த்து ரசித்துக்கொண்டிருக்கிறார். இப்படிப் பாம்பு ஆட்டும் பாம்பாட்டியை நமக்குக் காட்டுகிறவர் யார்? நம் குமரகுருபர சுவாமிகள்தான். அவர் தில்லைக் கூத்தனை எவ்வாறு தெரிசித்து மகிழ்ந்தாரோ அவ்வாறே சொல்லோவியமாக நமக்கு வழங்குகிறார். நாமும் சொல் ஓவியமாகக் காட்சி தரும் பாம்பாட்டிச் சித்தரை தெரிசித்து மகிழ்வோம்.

''ஒட்டுவிக்கக் கூட்டினை விட்(டு)
ஓடும் பொறியரவைந்(து)
ஆட்டுவிக்கும் சித்தர் நீர்
ஆனக்காற் — கூட்டமிட்டு
மன்றுடும் உம்மை யொரு
மாசுணம் நின் றுட்விக்க
நின்றுடு கின்றதென்கொல் நீர்
— சிதம்பரமும் மணிக்கோவை 6
மாசுணம் — பாம்பு
பொறியரவு — இந்திரியங்களாகிய பாம்பு''

# விடையரங்கம்

வினா:-

பரந்து விரிந்து கிடக்கும் உலகின்கண் இறைவன் திருவிளையாடல்கள் அனைத்தும் குறிப்பாகவும், சிறப்பாகவும் தமிழ் நாட்டில்தான் நடைபெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றனவே, அதற்குக் காரணம் என்ன?

— கோ. கமலபாஸ்கரன்

விடை:-

அ. ச. ஞானசம்பந்தன் M. A.,

தமிழ் நாட்டில் நடைபெற்ற இறைவன் திருவிளையாடல்களைத் தமிழ் நூல்கள் விவரிப்பதில் வியப்பு ஒன்றும் இல்லை. ஆனால் பரந்த அறிவுடைய தமிழன் எங்கும் நிறைந்துள்ள பரம்பொருள் அங்கங்கே தன் அருளை வெளிப்படுத்துகிறான் என்பதை நன்கு அறிந்திருந்தமையின் 'அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று பாடிப்போனார்கள்.

கன்னட நாட்டிலும் தெலுங்கு நாட்டிலும் எண்ணற்ற இறைவன் திருவிளையாடல்களைக் குறிக்கும் வரலாறுகள் உண்டு. சூர்தாஸ், கபீர்தாஸ், மீரா முதலியவர்கள் வடநாட்டில் இறைவன் திருவிளையாடல்களை அனுபவித்துப் பாடினர்.

பர்ஷியாவில்வாழ்ந்த சூபிக்கள் எனப்படும் இஸ்லாமியசித்தர்கள் இறைவிளையாட்டை அனுபவித்துப் பாடியுள்ளனர். கலீல் கிப்ரான் போன்றவர்களும் இதில் திளைத்தவர்களே. இஸ்லாமிய சித்தர்கள் சமாதிகள் உலகிடைப் பலவிடங்களிலும் உண்டு.

கிறிஸ்துவ சமயத்தில் செயின்ட்ஸ்என்றுவழங்கப்படுகிறவர்கள் அனைவரும் இறை விளையாட்டில் குளித்து எழுந்தவர்களே.

மிகப் பழைய கிரேக்க ஞானியாகிய பிளேட்டோ இறைவன் திருவருளால் அடியார்கள் உள்ளத்தில் தோன்றும் ஒளியை Divine Spark என்று கூறுகிறார். அப்பூதி அடிகள் புராணத்தில் சேக்கிழார் பெருமான் இந்த டிவைன்ஸ்பார்க் என்பதற்கு விரிவுரை செய்வதைக் காணலாம்.

'அங்கணர் அருளால் அன்பர் செவ்விய திருவுள்ளத்து ஓர் தடுமாற்றம்சேர நோக்கி இவ்வுரை பொருது என்னுள்ளம்' [அப்பூதி-நா].

உலகம்முழுவதும் தமிழ்மொழியும்அது கூறும் சமய நெறிகளும் தவிர வேறு இல்லைபோலும்

என்ற குறுகிய நோக்கால் வருவதே இந்த ஐயமும் இடர்ப்பாடும்.

'ஞாலமே! விசும்பே! இவை
வந்துபோம் காலமே!

என்பது மணிவாசகம். எனவே இந்த அண்டங்கள் முழுவதிலும் இறைவன் என்ற பெயருடன் ஆக்கல்முதலியவற்றைவிளையாட்டாகச் செய்யும் பரம்பொருளை இத்தமிழன் 'சிவன்' என்று பெயரிட்டு அழைத்தான். எனவே அவன் அறிந்த அளவில் திருவிளையாடல்கள் அனைத்தையும் சிவன் செயல் என்று கருதினான்.

இந்தக் கூட்டைத் தாண்டினால் இறைவன் எல்லா உலகங்களிலும் எல்லா மொழிபேசும் மக்களிடையேயும் திருவிளையாடல் புரிகின்றான் என்பதை நன்கு உணர முடியும். ஒரு மொழியிலே தம் மக்களிடையே பக்தி உணர்வைப் பரப்பத் தோன்றியவை புராணங்கள். எங்கோ நடந்த ஒன்றைக் கூறுவதால் உடன் இருப்பவர்கள் அதில் ஈடுபடமுடியாது. எனவேதான் இந்நாட்டில் அவை நடைபெற்றதாகக்கூறினர். இவ்வாறு கூறுவதால் தவறு இல்லை.

பெரிய புராணத்தில் வரும் 63 வரையும் கன்னட நாட்டில் தோன்றியதாகக்கூறும் புராணம் கன்னட மொழியில் உண்டு.

63 சைனஅடியார்கள் வரலாறு கூறும் சைன புராணமும் உண்டு.

கம்பன் அடிப்பொடி

சர்வ வியாபியான இறைவன் ''நீங்கலா – அலகிலா - விளையாட்டுடையவன்''. அத் திருவிளையாடல்கள் உலகில் எல்லாப்பகுதிகளிலும் தான் நிகழ்ந்துள்ளன; நிகழ்கின்றன. ஆனால் அவற்றை ஆழ்ந்து தரிசித்த அருளாளர்கள் பொதுவாகப் பாரத நாட்டில், சிறப்பாகத் தமிழகத்தில், மிகுதியாக உள்ளனர். ஆகவேதான் தமிழகத்தில் உள்ள ஆலயங்கள் ஒவ்வொன்றும் இறைவனின் திருவிளையாடல்களில் ஒன்றை அல்லது சிலவற்றை உணர்த்திக் கொண்டிருக்கின்றன. அன்றியும் தமிழகத்தில் உள்ளதைப் போல மற்றையப் பகுதிகளில் தல புராணங்கள் மலிந்து செழித்துக் காணப்படவில்லை. எனவேதான் இறைவன் திருவிளையாடல்கள் அனைத்தும் தமிழகத்தில்தான் நடைபெற்றதாக எண்ண இடமளிக்கின்றது.

கி. வா. ஜகந்நாதன்

தமிழ் நாட்டில்தான் திருக்கோயில்கள் அதிகம். பெரும்பான்மையான கோயில்களுக்குத் தல புராணங்கள் உண்டு. 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது தமிழ் நாட்டில் வழங்கும் பழமொழி. ஆதலின் இறைவன் திருவிளையாடல்களைப் பற்றி அந்தப் புராணங்கள் கூறுகின்றன.

வடக்கே தீர்த்தங்களுக்குச் சிறப்பு அதிகம் ஆயினும் அங்கும் காசி, திரியம்பகம், பூரி, துவாரகை முதலிய தலங்கள் உண்டு. அங்குள்ள மூர்த்திகளைப்பற்றிய புராணங்களும் இருக்கின்றன. பக்த விஜயத்தைப் பார்த்தால் பாண்டுரங்கனுடைய திருவிளையாடல்கள் பலவற்றைக் காணலாம். காசியைப் பற்றி வடமொழியிலும் தென்மொழியிலும் புராணங்கள் உண்டு. அங்கும் இறைவன் பல திருவிளையாடல்களை நிகழ்த்தியிருக்கின்றான். திருக்கைலாயம் அல்லது நொடித்தான் மலை என்பது வடக்கே உள்ளது தானே? அங்கே நிகழ்ந்த இறைவன் அருட்செயல்களைப் பற்றித் தமிழ்ப் புராணங்கள் சொல்கின்றன.

க. வெள்ளைவாரணன்

உலக முதல்வனாகிய இறைவன் மன்னுயிர்கள் உய்யும் வண்ணம் உலகெங்கும் தன் அருட்செயல்களை நிகழ்த்தியருளினும் அச்செயல்கள் மக்கள் வாழும் இடத்திற்கும் காலத்திற்கும் மொழி வழக்கிற்கும் உட்பட்டே மக்களுக்கு நன்கு புலனாமாதலின் அம்முறையில் தமிழகத்திலும் பரத கண்டத்திலும் நிகழ்ந்த அருட்செயல்களே நம்நாட்டுப்புராணங்களில் இடம் பெறுவனவாயின. அதுகொண்டு இறைவன் தென்னாட்டில்தான் இத்தகைய அருட்செயல்களை நிகழ்த்தினான், ஏனைய நாடுகளில் இறைவன் இத்தகைய அருட் செயல்களை நிகழ்த்தவில்லை எனக் கொள்ளுதல் 'தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' எனவரும் மணிமொழிக்கு மாறுபட்டதாகும். 'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்கு, இங்கே யென்றருள் புரியும் எம்பெருமான்' (2-40-6) என ஆளுடைய பிள்ளையாரும், 'பாராழி வட்டத்தார்பரவியிட்ட பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்' 'ஆரொருவருள்குவாருள்ளத்துள்ளே யவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்தோன்றும்' (6-18-6, 11) எனஆளுடைய அரசரும், 'எக்கோலத் தெவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும் அக்கோலத்தவ்வுருவேயாம்' (அற்புதத் – 33) என அம்மையாரும் 'எவ்வுருவில் யாரொருவர் உள்குவாருள்ளத்துள் அவ்வுருவாய்த் தோன்றி யருள்கொடுப்பான்' (திருக்கயிலாயஞானவுலா) எனச் சேரமான் பெருமாளும் அருளிய மெய்ம்மொழிகள் பரந்து விரிந்து கிடக்கும் இந்த உலகின்கண் உலக முதல்வனாகிய இறைவன்அடியார் பொருட்டு நிகழ்த்தியருளும் திருவிளையாடல்கள் இங்கு நிகழுமாறு போலவே உலகெங்கும் நிகழும் என்னும்மெய்ம்மையினைத்தெளிவு படுத்துதல் காணலாம். ''அடிகள் செய்வன ஆர்க்கறிவொண்ணுமே'' (3-44-3) எனவரும் திருமுறைத் தொடரும் இங்கு நினைக்கத்தகுவதாகும்.

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

வினாவில் கூறப்பட்ட கருத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. "இறைவனின் திருவிளையாடல் யாதொன்றும் தமிழ் நாடு தவிர வேறு எந்த நாட்டிலும் நடைபெறவில்லை" என்று எந்தப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது? தென்னிந்தியாவில் தெலுங்கு கன்னடம், மலையாளம் வழங்கும் நாடுகளிலும் இறைவன் திருவிளையாடல்கள் பல, பல வகையாக நிகழ்ந்துள்ளதாக அவ்வந் நாட்டுப் புராணங்கள் கூறுகின்றனவே!

வட இந்தியாவில் நிகழ்ந்தனவாகவே கூறப்படும் இறையருள் விளையாடல்கள் பல. புராண இதிகாசங்களாகிய பாரத இராமாயணங்களில் எத்தனை இறை விளையாடல்கள் வடநாட்டில் நிகழ்ந்தனவாகக் கூறப்பட்டுள்ளன!

இனி, இந்திய நாடல்லாத பிற உலக நாடுகள் பலவற்றில் இறைவன் திருவிளையாடல்கள் பல நிகழ்ந்தனவாக அந்த அந்த நாட்டு மதநூல்கள் கூறுதல் பலரும் அறிந்ததன்றோ!

அவ்வாறு இருக்கும் பொழுது மேல் வினவிற் கண்டவாறு ஐயம் நிகழக் காரணம் இன்னதென விளங்கவில்லை.

இறைவன் திருவிளையாடல்கள் தமிழ் நாட்டில் நிகழ்ந்தது போலவேதான் பிற நாடுகளிலும் நிகழ வேண்டும் எனக் கருத முடியுமா?

திருமுருக கிருபானந்தவாரியார்

தென்னாடு ஞானபூமி

ஆறுடை விடுகளும், பஞ்சபூத திருத்தலங்களும் தென்னாட்டில் இருக்கின்றன.

வங்கதிலே பிறந்த விவேகானந்தருக்குக் கன்யா குமரி பாறையில் ஞானம் உதித்தது.

பசுவின் உடம்பு முழுவதும் பால் பரவியிருந்தாலும் மடியில் கரந்து வெளிப்படுகின்றன. அது போல இறையருள் கரந்து வெளிப்படுகின்றஇடம் தென்னாடு என்க. இடத்திற்கு ஒரு தனித் தன்மையுண்டு

சிவபூமியில் வீரம் உண்டு.
சிவபூமியில் ஞானம் உண்டு.

க. வச்சிரவேல் முதலியார்

பரந்து விரிந்த உலகம் ஒரு பசுவின் உடல் போன்றது. பசுவின் சிறந்த பயனாகிய பாலைப் பெற வேண்டின் அதன்மடியினின்று தான்பெறமுடியும்;வேறுஉறுப்புக் களிற்பெறமுடியாது. அதுபோல, தமிழ் நாடுதான் வெப்ப தட்ப நிலைச் சமனுடைமையும் உயர்ந்த ஞானநெறி நிற்றற்குரிய நூல்கள் அவற்றின் வழிஒழுகும் நல்வாய்ப்புக்கள், திருக்கோயில்கள் முதலியவை சிறப்பாக அமைதுள்ள இடம். இதனை முதன்மையான

காரணமாகக் கொள்ளவேண்டும். மேலும், நாம் கற்றுணரும் புராணங்கள் தமிழகத்தையே பற்றியவையாதல் சார்பு காரண மாகும்.

Dr. டி. பி. சித்தலிங்கையா
M. A. phd.,

அற்புதங்கள் இன்னும் உல கெங்கணும் நிகழ்ந்துவருகின்றன. அவற்றைத் தொகுத்து எழுதி (Record) வைக்கவில்லையாதலின் வெளியே தெரியவில்லை. அற்பு தங்கள் அனைத்தும் இறைவனின் திருவிளையாடல்களே. திருவிளை யாடல்கள் இறைவனுல் நேரில் வந்து நிகழ்த்தப்படுவதோடன்றி, உயிர்கள் மூலமும் நிகழ்த்தப் பெறுகின்றன.

கிரேக்கநாகரிகம், ரோமானிய நாகரிகம், எகிப்திய நாகரிகம், சீன நாகரிகம், இந்திய நாகரிகம் ஆகிய இவ்வைந்துமே உலகில் மிகப்பழமையானவை ஒவ்வொன் றிலும் கடவுள் நம்பிக்கையும் வழி பாடும் உண்டு. இவற்றுள் மூத் தது இந்திய நாகரிகம். இதற் கான எழுத்துச் சான்றுகள் (Records) இந்த நாட்டில் புராணங் களாகவும் இதிகாசங்களாகவும் உருப்பெற்றன. இந்தநாடு 'கர்ம பூமி' எனக் கருதப்படுகிறது. அதாவது வினையைத்துய்க்கவும் உய்திபெறவும் இங்கே வந்து பிறக்கவேண்டும் என்பது பழங் கொள்கை. அதனுல்தான் கைலா யத்திலிருந்து சுந்தரமூர்த்தி இந்த நாட்டில் வந்து பிறந்தார்.

ஆகம முறையிலெழுந்த திருக் கோயில்கள் தமிழ்நாட்டில்தான் உண்டு. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகைச் சிறப்பும் இங்கே தான் போற்றப்பட்டது. அவ்வச் சிறப்பினை எடுத்துக்காட்ட நிகழ்ந்த அற்புதங்கள், புராணங் களாக எழுதப்பட்டு, போற்றப் பட்டன. தல புராணங்கள் இவ் வாறு எழுந்தவையேயாகும்.

இந்த நாட்டின் பிற பகுதி களில் இவ்வாறுன பகுப்பு முறை கள் அமையாமையாலும் ஆங் காங்கே நிகழ்ந்த அற்புதங்களைத் தலபுராணங்களாக எழுதிவைக் காமையாலும் அவை நமக்குக் கிட்டவில்லை. ஒரிரு தலங்களுக்கு இவை உண்டு. எடுத்துக்காட்டு: காசிகாண்டம், காசிரகசியம் – காசிமகாத்மியம் இவை காசியின் பெருமையையும் அங்கு நிகழ்ந்த திருவிளையாடல்களையும் கூறுகின் றன தமிழ்ப்புராணங்கள் தமிழ் நாட்டுத்தலங்களில் இடம்பெற்ற அற்புதங்களை வெயிடுவது இயல் பேயன்றோ? இதனுல்பிற மாநிலங் களில் நிகழ்ந்திருக்க முடியாதென் பதோ அவை குறிக்கப்படவில்லை என்பதோ, பொருத்தமாகாது. அவ்வப் பிராந்திய மொழிகளில் ஆங்காங்கே நடந்த இறைவன் திருவிளையாடல்கள் குறிக்கப் பட்டுள்ளன. எடுத்துக்காட்டு: ஸ்ரீசைல மாகாத்மியம், வேங்க

டேசுரமாகாத்மியம் - தெலுங்கு. புராதனரரகடுள, பசவபுராணம் - கன்னடம், ''பக்தமாலா'' 'பக்தவிஜயம்', 'ஸந்தவிஜயம்', 'ஸந்தவிஜயலீலாம்ருதம்'' நிபாத் நாகரம்-மராட்டி.

மகாவித்துவான்

ச. தண்டபாணி தேசிகர்

தங்கள் வினவின் போக்குச் சிவலீலைகளை எண்ணியே கேட்கப் பெறுவது போலத்தோன்றுகிறது.

பாத்ம புராணத்து வேனன் வரலாற்றில் பூமியே ஒரு பசுவாக உருவகிக்கப் பெற்றுள்ளது. உருவகப்பசுவுக்குப் பால்சுரக்கும் மடி அவரவர்கள் கருதுகிற நாடாகலாம். இதில்தடையில்லை. தமிழர்க்குத்தமிழ்நாடுமடி இங்கே சிவம் பெருகுகிறது. 'தென்னாடுடைய சிவன்' உரிமையான நாட்டிலே உரியவன் திருவிளையாடல் போற்றப் பெறுகின்றது.

இதுபோல வடநாட்டில் ஸ்ரீராமலீலா ஸ்ரீ கிருஷ்ணலீலா வழங்குவதும் அதனை விளக்கும். இராமாயண பாகவதங்கள் போற்றப்படுவதும் நாம் அறிந்தனவே.

கடவுள் லீலைகள் எங்கும் உண்டு. எம் மொழிகளிலும் உண்டு. சிவலீலை தமிழ்நாட்டை நிலைக்களனாகக் கொண்டவை. அதில் மேருவைச் செண்டாலடித்தது, இந்திரனை வென்றது; தடாதகைப் பிராட்டியார் திக்கு விசயம் செய்தது முதலான தென்னாட்டுச் சிறப்புச்சித்தரிக்கப் பெறுகின்றன.

பெரியபுராண வரலாறுகளும் ஒரு வகையில் சிவலீலைகளே. அவை தெலுங்கு, கன்னட நாடுகளிலும் வழங்குகின்றன.

இதன் அமைப்புக்களும் அதைப் போக்கும் சில மாறுதல்களுடன் பக்த விலாஸங்களிலும், சைவ புராணத்தும், பக்த விஜயங்களிலும் இந்தியா எங்கும் வழங்குகின்றனவே.

நமது இயற்பகையாரை இறைவன் விளக்கங் கண்டது போலக் கிறித்தவ வரலாறும் கிறித்தவ வேதத்திற் குறிக்கப்பெறுகிறதே. ஆதலால் இறைவன் விளையாடல் எங்கும் உண்டு. ஆங்காங்கு உள்ள மக்களின் மொழி பண்பாடுகட்கு ஏற்ப அவரவர் நினைத்த வடிவோடு அருள் விளையாடல்களைச் செய்வது இறைவன் இயல்பு. யாதொரு தெய்வங்கண்டீர் என்ற சித்தியார் திருவிருத்தத்திற்கேற்ப எல்லாம் சிவன் செயலாகக் கருதுவது நம் உடமை.

ந. ரா. முருகவேள்

M.A , M.O.L.,

''புவனியில் போய்ப் பிறவாமையில் நாள்நாம் போக்குகின்றோம் அவமே; 'இந்தப்பூமி சிவன் உய்யக் கொள்கின்றவாறு' என்று நோக்கித் திருமாலாம்

அவன் விருப்பு எய்தவும், மலரவன் ஆசைப்படவும்'' விளங்குவது, நம் செந்தமிழ் தெய்வத் திருநாடு!

உலகிற் பல நாடுகளில் குளிர் அல்லது வெப்பம் மிகுந்திருக்கும். பலநாடுகளில் வறண்ட பாலைவனங்கள் நிறைந்திருக்கும். பல நாடுகளில் அடிக்கடி வெள்ளக் கேடுகள் நிகழும். ஒருசில நாடுகளில் எரிமலைகளால் இடர்ப்பாடுகள் விளையும். மற்றும் சில நாடுகளில் அவ்வப்போது நில நடுக்கம் ஏற்படும். இவைகளைப் போன்ற யாதொரு தீங்கும் இன்றி, ''புண்ணிய பூமி'' எனப் போற்றத் தருவதாகத் திகழ்வது, ''தமிழ்கூறும் நல்லுலகம்'' எனப்படும் நம் தமிழ்நாடு ஆகும்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் போன்ற அருளாளர்கள் பலர், வாழையடி வாழையாகத் தொன்றுதொட்டு இன்றுவரை தோன்றி, 'கால் தரைதோய நடந்தும்,' வாழ்ந்தும், நம் தமிழகத்தினைப் பலவகைகளில் புனிதப்படுத்தி நலம் விளைவித்து வந்துள்ளனர்.

மரஞ் செடி கொடி வகைகள், அந்தந்த மண் வளத்துக்கு ஏற்ப அமைவது போல, ஒரு வகைத் தனிப்பெரும் அருட்டிறமும், மனவளமும் சிறப்பாக அமைந்திருத்தலே, இறைவனின் திருவிளையாடல்கள் நம் தமிழ் நாட்டில் பெரிதும் நிகழ்தற்குக் காரணம் எனலாம்.

இனி, ''இறைவனின் திருவிளையாடல்கள் அனைத்தும் நம் நாட்டில் தான் குறிப்பாகவும் சிறப்பாகவும் நடைபெற்றன'' என்று சொல்லுவது, ஒரு வகையில் முழு உண்மையன்று. உலகம் எங்கணுமே இறைவனது திருவிளையாடலும், திருவருள் விளக்கமும் இடையறுது நிகழ்ந்து கொண்டு தான் இருக்கின்றன. நாம் தமிழர்கள்; நமக்கு நம் தமிழ் நாட்டின் மேல் அன்பும் பற்றும் ஆர்வமும் அமைவது இயல்பு. நம் சான்றோர்கள், தாம் பாடும் புராணங்களில் நம் தமிழ்நாட்டு நிகழ்ச்சிகளையே பாடுகின்றனர். நாமும் தமிழிலுள்ள நம் புராணங்களையே பெரிதும் விரும்பிப் படிக்கின்றோம். ஆதலின், நம் தமிழ்நாட்டில்தான் இறைவனின் திருவிளையாடல்கள் அனைத்தும் நடைபெறுவனவாக, நாம் எண்ணுகின்றோம். ஆயினும், இறைவனின் அருட்டிரு விளையாடல்கள் எல்லாக் காலங்களிலும், எல்லா நாடுகளிலும், நிகழ்ந்து வருகின்றன என்பதே முழுஉண்மையாகும்.

கி. சத்தியநாரயணன்

'அன்பே தெய்வம்' அன்பும் பக்தியும் எங்கு நிறைவாக, மெய்யாக உள்ளதோ அங்கு

இறைவன் தன் திருவிளையாடல் களை நிகழ்த்துகிறார். பரந்து விரிந்த இவ் உலகில் பயபக்தி அன்பு பண்பு, சாத்விககுணம் முதலிய நற்பண்புகள் நிறைந்த பெரியோர்கள், யோகிகள் முதலானோர் நம் பாரத தேசத் தில்தான் அதிகமாக வாழ்ந் திருந்தனர். குறிப்பாகத் தென் நாடாகிய தமிழ் நாட்டில்தான் ஆதிசங்கரர் ஆழ்வார்கள் நாயன் மார்கள் முதலியவர்கள் தோன்றினர்.

தமிழ் நாட்டில் தான் இயல் இசை, நாடகம் முதலிய அனைத்துக் கலைகளிலும் ஏன் அரசியலிலும் கூட தெய்விகம் கலந்திருந்தது. அதனால்தான் அக்காலத்தில் தமிழகம் சிறந்து விளங்கியது. இவ்வாறுபண்டைக் காலத்தில் தமிழகத்தில் ஆன் மிகம் சிறந்து விளங்கியதால் தான் இறைவனின் திருவிளை யாடல்கள் சிறப்பாகத் தமிழ் நாட்டில் நடைபெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றன. இறை வன் உலகெங்கும் நிறைந்திருக் கிறார். ஆயினும் தென்னாட்டில் சிறப்பாக விளங்குகிறார் என்று மாணிக்கவாசகர் கூறுகிறார்.

# கந்தர் கலிவெண்பாவுள் சமயம்

## மு. அருணாசலம்

### IV. அகச்சமயம் (தொடர்ச்சி)

ஒன்று நாம் மனத்தில் கொள்ள வேண்டும். இவ்வாறு புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்றெல்லாம் பல வகையாகச் சமயப்பாகு பாடு செய்து ஆராய்ந்த போதிலும் கூட, இத்தனை விதமான சமயங்கள் வழக்கில் இருந்தன என்று கருத இடம் இல்லை. இவற்றுள் பல, சிறப்பாக அகச்சமயங்கள் என்பன, கருத்தளவில் அறிஞர் சிலர் கொண்டிருந்த கொள்கை; அச்சமயங்கள் மக்களிடையே ஆட்சியில் நிலவ வில்லை. உதாரணமாக முன்னமே குறிப்பிட்ட சங்கற்ப நிரா கரணம் என்ற நூலில் உமாபதி சிவாசாரியருடைய கருத்துக்களை ஒட்டிப் புது நூல் செய்த 16ஆம் நூற்றாண்டினரான சிதம்பரம் கண்கட்டி மறைஞானசம்பந்தர் என்பவர் முத்திநிலை என்ற 19 வெண்பாக் கொண்ட சிறு நூலில் ஆன்மானந்த வாதம் என்ற புதுக் கொள்கையை நிலை நாட்ட முயன்றார். இது ஆன்மாவுக்கு இயல் பாகவே ஆனந்தம் உண்டென்றும், மல பந்தத்தால் ஆனந்தம் தடைப்பட்டது என்றும் மலம் நீங்கி ஆனந்தம் பிரகாசிக்கும், ஆன்மா அவ்வானந்தத்தை அனுபவிக்கும் என்றும் சொல்லுகின்ற ஒரு கொள்கை. இது ஒரு மதமாக நிலவ வில்லை. இக்கொள்கை தவறு, இது சைவ சித்தாந்தத்திற்கு முரண் என்று கூறித் தருமபுரம் ஆதிகுருமூர்த்தியாகிய குருஞானசம்பந்தர் முத்தி நிச்சயம் என்ற பெயரில் 22 வெண்பாக்கள் எழுதினார். இந்த ஆனந்தவாதம் ஒரு வகையில் சிவசமவாதத்தின் பிரிவு எனக்கருதலாம்.

இதுபோலவே சூரியனார் கோயில் ஆதீனத்து குருமூர்த்தி களாகிய சிவாக்கிரயோகி தம்முடைய சிவாக்கிர பாஷ்யத்திலும் சிவநெறிப் பிரகாசத்திலும் கூறுகின்ற கருத்து பெரும் பகுதி சைவ சித்தாந்தமேயானாலும், ஓரளவு சிவாத்துவைதம் கலப்பு என்று சொல்லுவதுண்டு. இவை எல்லாம் தனி மதங்கள் அல்ல. சில சிறு கருத்து வேறு பாடுகள்; அவ்வளவே.

இறுதியாக, சைவசித்தாந்தம் என்பதே தமிழ் நாட்டில் சைவ மக்கள் மேற் கொண்டுள்ள சமயத்தத்துவக் கொள்கை, பெரும் தொகுதியான மக்கள் 'பிறவாயாக்கைப் பெரியோன்' என்று சொல்லிய இளங்கோ அடிகள் காலம் முதல் இன்று வரை ஒரே கொள்கையைக் கடைபிடித்து வந்திருக்கிறார்கள். அதுவே சைவ சித்தாந்தம் பிறவகைச் சைவங்கள், இதன் கருத்து எல்லையில் ஆங்காங்குத் தலை காட்டியிருக்கின்றன. அவை தத்துவக் கொள்கை யாக எங்குமே நிலைபெற்று ஆட்சி பெறவில்லை. நிலையான ஆட்சி பெற்று ஓங்கி இருந்தது எல்லாம் சைவ சித்தாந்தம் ஒன்றே. இதுவே தாயுமானவர் குடுப்பிட்டவாறு 'ராஜாங்கத்தில் அமர்ந்தது வைதீக சைவம்'. அவரே கூறுவது போல, எல்லோருக்கும் இதுவன்றித் தாயகம் வேறு இல்லையில்லை, சந்தானக்கற்பகம் போல் அருளைக் காட்டத் தக்க நெறி இந்நெறியே.''



# திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

திருநாகேச்சரம், சேக்கிழாருக்குத் திருவடிஞானம் நல்கிய திருத்தலம்; ஆன்மார்த்த தலம்; அவரது திருப்பணி பெற்ற தலம். சம்பந்தசுவாமிகளும், அப்பரடிகளும் வழிபட்டுத் தேவாரப் பாமாலை சூட்டப்பெற்ற இத்திருத் தலத் திருக்கோயில் பல லட்சம் செலவில் திருப்பணிகள் செய்யப்பெற்றுக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெறவுள்ளது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ **காசிவாசி எஜமான் சுவாமிகள்** அவர்களைப் புரவலராகவும் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களைத் தலைவராகவும் கொண்ட திருப்பணிக்குழு அமைந்துள்ளது.

மெய்யன்பர்களின் காணிக்கைகள் வரவேற்கப் படுகின்றன.

அனுப்பவேண்டிய முகவரி:— செயல் அலுவலர்,

**ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,**

திருநாகேச்வரம். (தஞ்சை மாவட்டம்.)

# களந்தை ஆதீசுரர் பதிற்றுப் பத்தந்தாதி

வாயாரத் தோத்தரிக்க நினைக்க நெஞ்சில்
மண்பட அட்டாங்கபஞ் சாங்க மாக
ஓயாமல் வணங்கஇரு கண்கள் கூர
ஒலிவிழாச் சேவிக்க புகழ்கள் கேட்க
தாயான சவுந்தரிதம் பங்கில் மேவும்
சதாசிவமாம் சுகலிங்கன் ருனே யிந்த
நாயான எளியேன் செய் யாமற் செய்த
நன்றிதனை மறப்பதுண்டா நல்வினையின் பயனே. 48

பயந்தவினைப் பழம்பகையை நீக்கிப் பொல்லா
பாவியேன் தனையாண்ட பரம்பரனு மவனே
வியந்தசெருக் கறமாற்றி இருப்பவனு மவனே
வெந்நரகக் குழியில்விழா தெடுப்பவனு மவனே
நயந்தமொழித் தேசிகனு வருபவனு மவனே
நல்லோர்கள் புகழ்களத்தை நகரில் வாழும்
சுயம்பிரகா சப்பொருளாஞ் சுகலிங்க மூர்த்தி
தோன்ருத துணையாவான் தொன்று தொடுவழக்கே. 49

வழக்கல்லா வழக்கெடுத்து வழக்குப் பேசி
வாய்மைமுறை யபுமானங் காத்தல் செய்யும்
பழக்கமில்லா ரொடுங்கூடி எந்நாள் வாழ்வேன்
பாவியேன் தனையெடுத்துப் பரிந்தே இந்தச்
சழக்கெலா மகற்றியெனை யாண்டவா லுன்றன்
தண்ணருட்குக் குறைவுண்டோ தானே தோன்றுந்
தழற்பிழம்பே தன்களந்தை நகரில் மேவுந்
தத்தையப்பா சந்திரசே கரத்தி னுனே. 50

(வேறு)

சேகு பற்றிய மணிக்கெலாம் வயிரொளி சிறந்தென்
வாகு பெற்றிடுங் களந்தைவாழ் சுகலிங்க மணியே
யோகு பற்றியென் உணர்வினில் உணர்தொறுமுறும்
பாகு மொத்தது தெவிட்டலை யானந்தப் படுமே. 51

படுகு ழிக்கிணை மாதரார் அல்குலிற் படிந்து
கொடும னத்தெம படரிடு நரகினிற் குறித்து
விடுமெ னக்கினி சதியுள தோவியன் களந்தை
நடுவுள் நிற்றிய சுகலிங்க நாயக நவிலே. 52

நவில்ம ழுக்கரன் அடியலாற் பின்னொன்று நாடேன்
செவிகொடுத்தவன் புகழலாற் பின்னொன்று தேரேன்
அவிகொ டுத்துணும் மறையவர் அமருநற் களந்தை
கவிகள் பெற்றிடுஞ் சுகலிங்கன் திருவுளங் காணேன். 53

காணுந் தோறுமுன் மத்தமே கொண்டுகண் ணன்றிப்
பேணுந் தோறுமெய் புளகித்து ரோமமும் பிறக்கும்
பூணும் பூவலி யங்களும் புகழ்பெருங் களந்தை
ஆணும் பெண்ணுமாஞ் சுகலிங்க னுண்டுகொண் டன்றே. 54

அன்று நீதடுத் தாண்டது பொய்கொலோ வடியேற் (கு)
இன்று தானெடு குறையுள தோசொல எம்மான்
கன்று மான்மழுக் கரத்தனே களந்தையம் பதிவாழ் (வு)
என்று மேயுகந் தாய்சுக லிங்கவெம் மிறையே. 55

இறையி டுத்தமேல் விளைவிலா அரசன்நாட் டிருந்து
குறையு மக்கள்போ லிவ்வுல கத்திடைக் குலைந்தேன்
மறைகள் முற்றுணர் ஞானிங்கள் மகிழ்ந்திடு களந்தைக்
கறைமி டற்றேறே .சுகலிங்க காப்பதுன் கடனே. 56

கடனன் றேபெறு தாயர்தங் குழவியைக் காத்தல்
விடல்நின் றேவந்த கணக்கறி யாவித மென்கொல்
தடநின் றார்க்கின்ற வாளைகள் தாவிடுங் களந்தை
நடநின் றுடிய சுகலிங்க நாககங் கணனே. 57

கங்கை யாடிய சடையவென் விடைய கங்காள
மங்கை யாடிய பாகத்த மான்மழுத் துடியோ (டு)
அங்கை யாடிய அமலனே அழகிய களந்தைச்
சங்க ராசுக லிங்கனே கதிதரத் தருமே. 58

தகுதி யோயுளத் தன்மையோ நன்மையோ தயவின்
பகுதி யோவுனை நினைந்திடிற் பரகதி தருவாய்
தொகுதி யோதிய களந்தைவாழ் சுகலிங்க நெஞ்சம்
புகுதி யோபுறம் போகிடிற் புலம்புவன் புலர்ந்தே. 59

புலர்ந்து போயினேன் அஞ்சலென் பாரின்றிப் புண்ணாய்
உலர்ந்து போயினேன் உறுதுணை நீயலா துண்டோ
மலர்ந்த தாமரைப் பொதும்பரார் வயற்பெருங் களந்தைச்
சலங்கொள் வேணிய சுகலிங்க தத்துவப் பொருளே. 60

தத்துவமுந் தானாய்த் தனிமா மறைப்பொருளாய்
வித்தும் மரமும் விளைபொருளுந் தானானன்
அத்தன் களந்தை அமருஞ் சிவலிங்கன்
சித்தந் தெரியாதே செங்கதியுந் தாரானே. 61

தாரா னெனது தவக்குறையைக் கண்டக்கால்
ஆரேனு மென்னோ டடுத்து ணைய ராவாரோ
சீரார் களந்தை செழிக்கும் சுகலிங்கன்
பேரா யிரமுள்ள பெம்மான் பெருமையையே. 62

பெருமை எலாம் பெற்றபெருமான் சிறியேன்தன்
அருமை அறிந்தங் கருள்வா னடியேனுக்கு
ஒருமை உறுநெஞ்சே உய்வாய் களந்தைநகர்
இருமைதரு காரணனே எங்கள்சுக நாயகனே. 63

நாயேனைச் சென்ம நடுக்கடல் நின்றேற்குத்
தாயே யெனவந்து தாட்புணையைத் தந்தளித்தான்
தூயோன் களந்தைச் சுகலிங்கன் றெழுந்த
காயோத நஞ்சுண்ட காபாலி காரணனே. 64

காரணமுங் காரியமுங் கற்பனையுந் தாங்கடந்த
பூரணனை ஞானப் பொருளைக் களந்தைநகர்
வாரணத்தோல் போர்த்தானை மன்னுஞ் சுகலிங்க
வாரணனை யுள்ளடக்க ஆரெனைப்போல் வல்லாரே. 65

வல்லான் புரமெரிக்க வையகந்தேர் மேருமலை
வில்லான் அரியம்பு வேதங்கள் வாம்பரியாம்
கல்லால் நிழலாங் களந்தைச் சுகலிங்கன்
பல்லா யிரகோடி யண்டப் பரப்பானே. 66

அண்டப் பரப்பி லளவிறந்த பூதங்கள்
தெண்டனிட்டுப் பாடத் திருக்கூத்துத் தானுகந்தான்
தொண்டைக் களந்தைச் சுகலிங்கன் பொற்பாதம்
புண்டரிக நெஞ்சப் புனலின் மலர்ந்திடுமே. 67

மலடும் மணமும் மதிக்கத் திருந்தெண்ணும்
திலமுமதில் நெய்யுமெனத் தியுமதில் வெப்பும்போல்
நிலவுங் களந்தை நிறைந்த சுகலிங்கன்
பலவுந் தடுவான் பணியாத தெல்குறையே. 68

குறையாம் மதிபு னைந்த கோடீரன் கொங்கைப்
பொறையா ரழகும் புகழ்களந் தையூரில்
மறையோதி நின்று மகிழ்ந்த சுகலிங்கன்
சிறையாம் பிறப்பறுக்குஞ் சேறகற்றுஞ் சேவகனே. 69

சேவேறி வந்து திருவிழாக் கொண்டடுளி
நாவேறு மென்சொல் நயமறிந்த நன்களந்தைக்
கோவே றிலாத குழகன் சுகலிங்கன்
மாவேறி யன்று மதுரைநகர் வந்தனனே. 70

(வேறு)

வந்தா தாதரிக்கு மடியவர்கள் முன்பு வருவான் வரங்கள்
தருவான்
சிந்தா குலத்தை யொழிப்பான் அழிப்பான் திரிமா மலங்கள்
உறவும்
கந்தார் களிற்றை யுரிப்பா னெரிப்பான் கருதார் புரங்கள்
முழுதும்
தந்தார் களந்தைச் சுகலிங்க நாதன் நமையாள வந்த
குருவே. 71

குரவங் கமழ்ந்து மணநாறு புன்னை குலவுங் களந்தை நகரில்
அரவம் புனைந்து மலைவந் தெழுந்த அழகம்மை பங்கில்மருவும்
சுரரும் பணிந்து நரும் பணிந்த சுகலிங்க மூர்த்தி யடியை
கரமுங் குவிந்து மனமுங் கனிவர் கவிபாடிவலவர் கதியே 72

கதிக்குந் தனத்து விலைமாதர் தங்கள் கலவிக் குகந்து கனிவர்
விதிக்கும் அவன்கைப் படைக்குந் தொழிற்கும் விடுக்கும் படிக்கு
நினைவிர்
மதிக்குங் களந்தைச் சுகலிங்க மூர்த்தி மலர்த்தான் நினைக்குமு
ணர்வும்
உதிக்குங் கணத்து விடுமே யதன்றி ஒழிக்குங் கணத்து
விடுமே. 73

# தத்துவம் முப்பத்தாறு



திருமுறைச் செம்மல் மதுரகவி தா. ம. வெள்ளைவாரணம்

ஆன்மதத்துவம் : இவை அந்தக் கரணம் 4, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, தன்மாத் திரை 5, பூதம் 5, என ஆக மொத்தம் இருபத்து நான்கா கும். இவை அசுத்த மாயையில் தோன்றி மீண்டும் அதிலே ஒடுங் கும் இயல்புடையன.

இவற்றில் அந்தக்கரணம் என் பனஉட்கருவிகளாகும். அதாவது உயிர்கள் பெற்ற உடம்புக்கு உள்ளே இருக்கின்ற கருவிகளா கும். இவை சித்தம், புத்தி, அகங் காரம், மனம் என நான்காகும். சித்தம் என்பது ஒருபொருளை ஈது யாதாயிருக்கும் என்று ஆராயும் நிலையில்சிந்திக்கும். புத்தி என்பது சித்தம் சிந்தித்ததை இன்னதாக இருக்கும் என்று நிச்சயிக்கும். அகங்காரம் என்பது புத்தியி லிருந்து தோன்றி ஈங்கு ஆர்தான் என்னோடு ஒப்பார் என்றும், நான் என்றும், எனது என்றும் அகங் கரிக்கும். மனம் என்பது யாதா வதொருபொருளை நினைக்கும்.

ஞானேந்திரியம் என்பன அறி தற்கருவிகளாகும். இவற்றை ஐம் பொறிகள் என்றும் கூறுவர். அதாவது உயிர்கள் தமக்குப் புறத்தே உள்ள பொருள்களையும் நிகழும் செயல்களையும் அறிந்துக் கொள்வதற்கு உரிய கருவிகளா கும். இவை மெய் வாய் கண் மூக்குச் செவி என ஐந்தாகும். இவற்றில் மெய் என்பது ஊற்று ணர்ச்சியால் ஒன்றை அறிவதற்கு உரியகருவி. வாய்(நாக்கு)என்பது சுவையால் ஒன்றை அறிவதற்கு உரிய கருவி. கண் என்பது ஒளி யால் ஒன்றை அறிவதற்கு உரிய கருவி. மூக்கு என்பது நாற்றத் தால் ஒன்றை அறிவதற்கு உரிய கருவி. செவி என்பது ஓசையால் ஒன்றை அறிவதற்கு உரிய கருவி.

கன்மேந்திரியம் என்பன தொழில் புரியும் கருவிகளாகும். அதாவது உயிர்கள் தம் விருப்பத் தைச் செயல்களாக வெளியிடுவ தற்கு உரிய கருவிகளாகும். இவை வாக்கு பாதம் பாணி வாயு உபஸ்தம் (அதாவது வாய், கால், கை, எருவாய், கருவாய்) என ஐந்தாகும். இவற்றுள் வாய் என்பது பேசுதல்முதலியவற்றைச் செய்யும். கால் என்பது நடத்தல் முதலியவற்றைச் செய்யும். கை என்பது கொடுத்தல் முதலியவற் றைச் செய்யும். எருவாய் என்பது மலங்கழிக்கும். கருவாய் என்பது இன்பம் துய்க்கும்.

தன் மாத்திரை என்பன மண் முதலிய ஐந்துபூதங்களில் காணப் படும் குணங்களாகும். இவற்றை ஐம்புலன் என்றும்கூறுவர். இவை ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என ஐந்தாகும். இவற்றுள் ஓசை என்பது செவியால் உணரப்படும் புலன். ஊறு என்பது மெய்யால் உணரப்படும் புலன். ஒளி என்பது கண்ணால் உணரப்படும் புலன். சுவை என்பது நாவால் உணரப் படும் புலன். நாற்றம் என்பது மூக்கால் உணரப்படும் புலன்.

பூதம் என்பன பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் (அதாவது மண் நீர் நெருப்பு காற்று வான்) என ஐந்தாகும். இவற்றுள் மண் என்பது கடினமாயிருக்கும். நீர் என்பது குளிர்ந்திருக்கும், நெருப்பு என்பது சுட்டு ஒன்று விக்கும். காற்றென்பது பரவி அலைந்துக் கொண்டே இருக்கும். வான் என்பது எல்லாப் பொரு ளும் இருக்க இடம் கொடுக்கும்.

முடிவுரை :- தத்துவம் 36 என் றும் அவை இன்னின்ன இயல் புடைய என்றும் நூல்களின் வாயி லாகவும் ஆசாரியரின்வாயிலாக வும் உயிர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் இந்த நிலையைத் தத்துவ ரூபம் என்பர். தத்துவங் களைத் தெரிந்துகொண்ட உயிர், தான் தத்துவங்களில் ஒன்று அன்று என்றும் அவற்றின் வேறு என்றும் அநுபவ வாயிலாக அறிந்து கொள்ள வேண்டும். இதனைத் தத்துவதரிசனம் என்பர் அதன் பின் தத்துவங்களினின்று நீங்குதற்கு அதவாது பிறவியி னின்று விடுபதற்காக ஆசாரியனை அடைந்து தீக்கை பெறுதலும் குரு லிங்க சங்கம வழிபாடுகளைச் செய்தலும் வேண்டும். இதனையே தத்துவ சுத்தி என்பர். இங்ஙனம் தத்தவரூபம், தத்துவ தரிசனம் தத்துவ சுத்தி என்ற படிமுறை யால் பிறவியை அறுக்க முயல் வதே தத்தவங்களை அறிதலின் பயன் என்று சைவ சித்தாந்தம் கூறும். வள்ளுவரும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின் வகைதெரிவான்கட்டே உலகு என்று கூறியுள்ளார்.

# இராஜகோபுரம்

# விழிகள் கண்டன

## Dr. T. B. சித்தலிங்கையா

உலகம் தோன்றிய நாள் முதல் ஒளியும், இருளும் சேர்ந்தே இருந்து வந்திருக்கின்றன. அதே போல நீதியும், அநீதியும், தர்மமும், அதர்மமும் இணைந்தே வந்திருக்கின்றன. நல்லவர்கள் நீதி, அறம் முதலியவற்றைப் போற்றி ஒழுகினர்கள். அல்லவர்கள், மாருக, அநீதியையும், அதர்மத்தையும் வளர்த்தார்கள். தீயவர்கள் வளர வளரத் தீய சக்திகளும் வளர்ந்தன. அப்போது அவற்றை ஒடுக்க வேண்டிய கட்டாயம் இறைவனுக்கு ஏற்படுகிறது.

''நல்லவர்களைக் காக்கவும் தீயவர்களை அழிக்கவும் அறத்தை நிலை நாட்டவும் நான் அவ்வப் போது அவதாரம் செய்கிறேன்.'' என்று கண்ணன் கூறியது கீதையில் ஒலிக்கிறது. மூன்று செயல்கள் இதிலே குறிப்பிடப்படுகின்றன. இவற்றுள் எந்த ஒன்றுக்காக அவதாரம் நிகழ்கிறது? அவதாரத்தின் நோக்கம் நல்லவர்களைக் காப்பதா, தீயவர்களை அழிப்பதா, அல்லது அறத்தை நிலை நாட்டுவதா? இவற்றுள் எதைச் செய்தாலும் மற்ற இரண்டு செயல்களும் கூடவே நிகழும். என்றாலும், அற நெறியைக் காப்பதும், நிலை நாட்டுவதும் தான் இறைவனின் அவதார நோக்கம். அறம் காக்கப்படும் போது அதனைச் சார்ந்து இருக்கின்ற நல்லவர்கள் காக்கப் படுகின்றனர். அறம் நிலை நிறுத்தப்படும் போது அதற்கு முரணான ஒன்று அழிக்கப் படுகிறது. அதையே போற்றி நிற்பவர்களும், அழிக்கப்படுகிறார்கள். ஆகவே, நல்லவர்களைக் காத்தல், அல்லவர்களை அழித்தல், அறத்தை நிலை நாட்டல் ஆகிய மூன்றும் வெவ்வேருகத் தோன்றினாலும் ஒன்றில் மற்ற இரண்டும் அடங்குகின்றன. அறம் நிலைத்த பிறகே மற்ற இரண்டும் நிகழ்கின்றன என்று கொள்வதற்கில்லை. ஒன்று தொடங்கிய பொழுதே மற்ற இரண்டும் நிகழத் தொடங்கிவிடுகின்றன. (They one not consequential; tl ey take place simultaneously)

அறத்தை நிலை நாட்டும் நோக்கம் பெரிது தான். அதனை அடைவதற்குரிய வழியும், பெரிதாகவே — தீமையற்றதாகவே— இருக்கவேண்டும். அடைய வேண்டிய இலட்சியம் அறமாக இருந்

தால் போதும்; அதனை அடையச் செல்லும் வழிவேருகவும் இருக்கலாம் என்று அமைவதிற்கில்லை. அடைய வேண்டிய பொருள் அறம்; அடையும் வழியும் அறம். அப்போதுதான் அறத்தை அடைய முயல்பவனே, நிலை நாட்ட நினைப்பவனே அறவாழி அந்தணன் ஆகிருன். இந்த மூன்றிலேயும் ஏதாவது ஒன்றைப் பற்றிக் கொண்டாலும் மற்ற இரண்டும் தாமாகவே அமைந்து விடுகின்றன. சாதாரண மனிதனுக்கே; இது பொருந்தும் என்ருல் தெய்வத்துக்குக் கேட்கவா வேண்டும்? அதனுல்தான் வலி இழந்து நின்ற இராவணனை இராமன் ''இன்று போய்ப் போர்க்கு நாளை வா,'' என்று கூறி அனுப்பி வைத்தான். அதனுலேயே அவன் ''அறத்தின் நாயகன்" ஆனுன்.

மற்றெரு போர்க்களக் காட்சியைக் காணலாம். இங்கேயும் நீதிக்கும், அநீதிக்கும் இடையே போர் நடக்கிறது. நீதியை நிலை நாட்ட முருகன் வேல் ஏந்தி நிற்கிருன். அநீதியை அழித்து, நீதியை நிலை நாட்ட வேண்டிய இலட்சியத்தோடு நிற்கிருன். அதை அடைவதற்கு நீதி நெறியையே — போர்க்கள நீதி நெறியையே — பின்பற்றுகிருன். தனது சேனைத் தலைவர்களும், படை வீரர்களும் அந்த நெறியையே சிறிதும் தளராமல் பின்பற்ற வேண்டும் என்று விரும்புகிருன்; விதிக்கிருன். அந்த விதிகள் எவை, எவை என்று தெளிவாக எடுத்துச் சொல்கிருன். அந்த விதிகளைக் கடைப்பிடிப்பதனுல் பகைவர்கள் உயிர் தப்பினுலும் கவலை இல்லை என்பது அவன் முடிவு.

அவுணர் தலைநகரில் ஒரே பதற்றம். பெண்களும், பெரியவர்களும், குழந்தைகளும், கவலை பொங்கக் காத்திருக்கிருர்கள். மனத்தில் உள்ள கவலை முகத்தில் தெரிகிறது. பொங்கிய கவலை கண்ணீராகப் பொழிகிறது. போருக்குச் சென்றவர்கள் உயிரோடு திரும்பிவர வேண்டுமே என்ற கவலை, ஏக்கம் அந்தச்சூழ் நிலையிலேயே நிரம்பி இருக்கிறது. இந்தக்கவலைச் சுமையோடு வீட்டிற்குள் இருக்கமுடியாமல் வெளியே வந்து எட்டிப்பார்க்கிருர்கள். செய்தி வருமோ என்று காத்திருக்கிருர்கள். அண்ணனும், தம்பியும், கணவனும், மகனுமாகப் போருக்குச்சென்றவர்கள் அந்த உறவைச் சொல்லிக் கொள்வதற்குத் திரும்பி வருவார்களோ, என்ற கவலையும், வரமாட்டார்களோ என்ற அவநம்பிக்கையும் மாறி, மாறி அவர்களை அலைக்கழிக்கின்றன.

போர் மும்முரமாக நடை பெற்றுக் கொண்டிருக்கிறது. அவுணர் படை வீரர்கள் அமரர் படை வீரர்களின் ஆற்றலுக்கு முன்னுல் தம்மை இழந்து நிற் கிருர்கள். போரிடும் துணிவும் இல்லை, உயிர் விடும் எண்ணமும் இல்லை. புறமுதுகிட்டுப் போக வும் அச்சம்; தப்பிச் செல்வதற்கு வழியைத்தேடுகிருர்கள். அங்கே செக்கச் செவேல் என்று இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடுகிறது. அதன் வேகத்தில் இறந்து கிடந்த யானைகளும், குதிரை களும் வீரர்களும் படைக்கலங் களும் அடித்துச் செல்லப்படு கின்றன.

இதைக் கண்டதும் உயிர் தப்ப ஒரு வழி கிடைக்கின்றது. போரில் உயிர் துறக்க விரும்பாத, அவுணப் படைத்தலைவர்களும், வீரர்களும் ஆற்றில் குதித்து அதன் போக்கிலேயே நீந்தி, நீண்ட தூரம் சென்று கரை ஏறு கிருர்கள். தலைநகரை நோக்கி வேகமாக நடக்கிருர்கள்.

தலைநகரில் பெண்கள் கவலை யோடு காத்திருக்கிருர்கள். தெரு வாயிலில் தூணின் மீது சாய்ந்து கொண்டு ஒரு கையை உயர்த்தி மேல் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு தலையைத் தாழ்த்தித் தெருவின் இரண்டு பக்கங்களை யும் பார்த்துக் கொண்டிருக் கிருர்கள். நேரம் ஏற, ஏற அவர்களுடைய நம்பிக்கை தளர் கிறது. கண்கள் நீரைச் சொரி கின்றன. மார்பு நனைகின்றது ஒரு முறை வழிந்த கண்ணீர் முகத்தில் தன் கறையை விட்டுச் செல்கிறது. அடுத்து வரும் கண்ணீர் முகத்தில் மற்ருெரு பாதையை ஏற்படுத்துகிறது. கண்களில் இரு ஓரங்களிலும் கசிவும், பிசுபிசுப்பும் நின்றிருக் கின்றன. யரோ தெருவில் வந்து கொண்டிருக்கிருர்கள். ஆவ லோடு உற்றுப் பார்க்கிருர்கள் பெண்கள். கண்ணீர் பார்வையை மறைக்கிறது. எதிரிலே வந்து நின்ற பிறகு தான் தம் கணவன் மார் என்று அந்தப்பெண்களுக்குத் தெரிகிறது. கணவன்மார்களைக் கண்ட மகிழ்ச்சியில் மீண்டும் கண்ணீர்; பேச நா எழவில்லை. 'எப்படி உயிர் பிழைத்தீர்கள்?' என்று கேட்கவும் முடியவில்லை. ஒவ்வொருவீரனும், தன் மனைவி யிடம் தான் உயிர்பிழைத்த கதை யைச்சொல்லத் தொடங்குகிருன் ''கண்ணே, உன்னுடைதாலியைக் காத்தது எது தெரியுமா? நம் குலத்துக்கு எமனுக வந்துள்ள அந்த முருகன் சொன்ன சொல் தான் உன் தாலியைக் காப்பாற் றியது. அவன் தன்னுடைய படைத்தலைவர்களை அழைத்தான் 'தலைவர்களே நான் சொல்வதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள் எதிரிகளைத் தாக்குவதற்கு முன்னுல் சிலவற்றைக்கவனிக்க வேண்டும். மாலை அவிழ்ந்து நிற் பவர்களையும் தலைமுடி அவிழ்ந்து நிற்பவர்களையும் தாக்கக்கூடாது.

— வளரும்

# இருபா இருபஃது

தெளிவுரை :

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்

பூழை - துளை. நெறியல்லா நெறிச் சென்று உயிரை வருத்துதலின் 'புலன் கடைப் பூழை' யென்ருர். உயிர் அறிவு நிலையில் யாண்டும் நிற்பதாயும், உடலொடு கூடிய வகையில் ஒருவழிப்பட்டு அமைவதாயும், தான் செய்த இருவினைக் கேற்பத் துறக்க நரகங்களில் சென்று துய்ப்பதாயும் அமைந்துள்ளது. இம் மூவகை நிலையுள் உயிர்க்கு இயல்பாகிய நிலை எது? என்பது முதல் வினவாகும். இம் மூவகை நிலையினின்றும் நீங்கி உயிர் திருவடியின்பத்தைப் பெறுவதே அதன் இயல்பான நிலை என்பது அதற்குரிய விடையாகும். உயிர் ஒரு தன்மைத்தாகவும் அது எடுக்கும் உடல் பெருத்தும் சிறுத்தும் காணப்படக் காரணம் என்ன? என்பது அடுத்த வினவாகும். அது செய்த வினையே அதற்குக் காரணம் என்பது அதற்குரிய விடையாகும். 'உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலும் அரிது, (சிந். 2753), 'உண்டு பல் யோனியெல்லாம் ஒழித்து மானுடத்து உதித்தல் கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண்' (சித்தி-179) என வருவனவும் காண்க. எடுத்த உடற்கு ஏற்ப அறிந்தறிந்து வந்ததை அடுத்தடுத்து வரும் பிறவியிலும் உயிர் அறியாமைக்குக் காரணமென்ன? என்பது அடுத்து வரும் வினவாகும். உயிர் தான் செய்தவினையை நுகர்தற்காக இறைவன் தன் மறைப்பாற்றலால் அவ்வாறு செய்கின்ருன் என்பது அதற்குரிய விடையாகும்.

7. மொழிந்த அவத்தை முதல்அடியேன் நின்ருங்கு
ஒழிந்தன நான்கும் உணர — இழிந்தறிந்து
ஏறிற்றிங்கு இல்லை யெழில் வெண்ணெய் மெய்த்தேவே
தேறிற்றுஎன் கொண்டு தெரித்து.

(தெ-ரை) அழகு பொருந்திய திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கும் மெய்கண்டதேவனே! சொல்லப்பட்ட நனவு, கனவு,

உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் ஆகிய ஐவகைத் துன்பங்களி லும் முதல் துன்பமாகிய நனவுநிலையில் அடியேன் நின்று அறிந்தாற் போல், ஒழிந்த நால்வகைத் துன்பநிலையிலும் அடியேன் நினைவு உண்டாக ஒவ்வொன்ருகப் பொருந்தி மீளுமாறு அறிந்ததில்லை. அங்ஙனமாக அந்நால்வகைத் துன்பமும், உயிர் அடையும் என நீர் அருளுவது எது பற்றியென அருளுவீராக என்பதாம்.

உயிர் படும் ஐவகைத் துன்பங்களுள் நனவு நிலையில் துய்ப் பவற்றை உயிர் நன்கறிவது போல, ஏனைய நிலைகளில் உயிர் நிற்கு மாற்றையும் துய்க்குமாற்றையும் நன்கறிய இயலாதாகின்றது. அங் ஙனமாக அவ்வைவகைத் துன்பங்களும் உளவென எங்ஙனம் அறிதல் கூடும் என்பது வினு. காலம், நியதி முதலிய தத்துவங்களின்றும் நீங்கின் உயிர் கனவு முதலிய நால்வகைத் துன்பங்களையும் பொருந் தும் என உய்த்துணர்வால் அறிதல் வேண்டும் என்பது அதற்குரிய விடையாகும்.

8· தெரித்ததுஎன் கொண்டுஎனை யுருத்திர பசுபதி
செடிய னேனையும் அடிமை செய்யப்
படிவம் கொண்டு வடிவுகாட் டில்லாப்
பெண்ணை ஆளும் வெண்ணெய் மெய்ய
அவத்தையில் தெரித்தனன் ஆகில் அவத்தை
தெரிந்தாங்கு இரித்தலும் இலனே திருத்தும்
கால முதலிய கருவி ஆயின்
மாலும் பிரமனும் வந்துஎனை அடையார்
ஓதுங் காலை ஒன்றை ஒன்று உணரா
சேதநம் அன்றவை பேதைச் செயல்இச்
சேதநம் ஆனுற் செயல்கொள வேண்டும்நற்
போதம் இவற்றைப் புணர்வதை யறியேன்
கருவித் திரளினும் காண்பது ஒரொன்றும்
ஒருவுவது அறியேன் உணர்விலன் ஆதலின்
நிற்கொடு கண்டனன் ஆயின் எற்குக்
கருவி ஆயினை பெருமையும் இலவே
யானே பிரமம் கோனே வேண்டா
இன்னும் கேண்மோ மன்ன நின்னின்
முன்னம் என்றன் உணர்விலன் ஆதலின்
என்னைக் காண்பினும் காண்பல காணுது
உன்னைக் காண்பினும் காண்பல வுன்னேடு

ஒருங்கு காண்பினும் காண்பல அருந்துணை
கண்டவாறு ஏதுஎனது கண்ணே
அண்ட வாண அருட்பெருங் கடலே.

(தெ-ரை):உருத்திரன் என்ற திருப்பெயரையும் உயிர்க்குத்தலைவன் என்ற பெயரையும் ஒருங்குடைய உருத்திர பசுபதியே! குற்றமுடைய அடியேனையும் அடிமை கொண்டருளுதற் பொருட்டுக் குருவடிவு கொண்டு தம் உண்மை வடிவைக் காட்டாது திருவெண்ணெய் நல்லூரின்கண் எழுந்தருளியிருக்கும் மெய்கண்டதேவனே! அடியேனது கண்எனற்கு உரியனே! அமரர்க்குத் தலைவனே! அருளார் அமுதத்தை வழங்கியருளும் கடலே! அடியன் என்று ஒரு முதல் உண்டு என யான் எங்ஙனம் அறிந்தது? நனவு முதலாகிய ஐவகைத் துன்பங்களையும் அடைதலின் அவற்றைத் துய்க்கும் ஒருவன் உளன் என அறிவேனெனில், அவ்வைவகைத் துன்பங்களையும், துய்த்த வாற்றான் அறிந்து அவற்றினின்றும் நீக்கிக் கொண்டேனும் இல்லேன். அவற்றை நீக்குவது காலம் நியதி முதலிய கருவிகளெனில் அடியேனைக் காத்தற்கும் படைத்தற்கும் ஆக மாலும் பிரமனும் வந்து எனை அடைதற்குக் காரணமில்லையாம். அன்றியும் அக்கால முதலிய கருவிகளும் ஒன்றை ஒன்றுணராமையின் அவை அறிவுடையன அல்ல. அறிவற்றனவேயாம். அன்றி அடியனே அறிபவனும் அக்கருவிகளின் பயனைக் கொள்ளத்தக்கவனும் எனில் அடியேனுடைய அறிவு அக்கருவிகளைக் கூடுவதையும் அறிகின்றேனல்லேன். அன்றியும் அக்கருவிகளனைத்தும் கூடிய நனவு நிலையிலும் சுவை ஒளி ஊறு முதலிய புலன்களை நுகருமிடத்தும் ஒவ்வொன்றாக நுகர்வதன்றி அவ்வைந்தையும் ஒக்க நுகர்வதில்லை. அந்நுகர்வினின்றும் நீங்குங்கால் அக்கருவிகளின்றும் நீங்குவதையும் அடியேனது அறிவின்மையால் அறிகின்றேனில்லை. கருவிகளைக் கொண்டு அறிவதெல்லாம் நீயாகத் தனித்து நிற்கும் நிலையென்று. நாம் அறிவிக்க அறியும் நிலையிலேயாம் எனில், அடியேன் அறிதற்குரிய கருவியாக நீரமைவதன்றிப் பெருமையுடைய தலைமை பெறுதற்கு நுமக்கு இயலாதாம். அடியனே தலைவன்; அடியேனுக்கு ஒரு தலைவன் வேண்டாம் எனவும் கருதற்கு ஏதுவாகும். அன்றியும், அடியேன் மேலும் விண்ணப்பித்துக் கொள்வதும் ஒன்றுண்டு. அதனையும் கேட்டருளுவீராக. நீர் அறிவிக்க அறியும் உணர்வுடையனென்பதும் அடியேனது அறிவின்மையால் உணர இயலாதவனாயினேன். இவ்வாற்றான் அடியேனின் உண்மையும் காண்டற்கியலாதாகின்றது. நும்மையும் காண்டற்கு இயலாதா

கின்றது. நும்மொடு பொருந்துமாற்றையும் காண இயலாதாகின்றது. அங்ஙனமாக அடியேனின் உண்மைத் தன்மையை எங்ஙனம் காண்பன்? அருளுவாயாக என்பதாம்.

செடி – குற்றம். இரித்தல் – நீங்குதல். சேதநம் – அறிவு. போதம் – அறிவு. உயிரென ஒரு முதல் உண்டு என்பதை எங்ஙனம் அறிவது என்பது முதல் வினவாகும். நனவு முதலாய ஐவகைத் துன்பங்களும் அடைவது ஒன்றுளது என அறிதலின் அவ்வாறு அவற்றை அடைவது உயிரென உய்த்துணரப்படும் என்பது அதற்குரிய விடையாகும். ஐவகைத் துன்பங்களுள் நனவினையறிதல் போல ஏனையவற்றை நன்கறிய இயலவில்லையே என்றது அடுத்த வினவாகும். உயிர் முப்பத்தைந்து கருவிகளுடனும் தொழிற்படு நிலையில் நனவு உளதாகின்றது. ஆதலின் அதை நன்கறிய முடிகின்றது. எஞ்சிய துன்பங்களை அநுபவிக்குங்கால் கருவிகள் படிப்படியாகக் குறைந்து விடுதலின் அவற்றை முழுமையாக அறிய முடியவில்லை என்பது அதற்குரிய விடையாகும். ஐவகைத் தன்பங்களினின்றும் நீங்கச் செய்வது கால முதலிய கருவிகளெனில் அவையே அமையும்: காக்கவும் படைக்கவும் அயனும் மாலும் வேண்டா. அன்றியும் அக்கருவிகள் அறிவற்றனவாதலின் அதற்கு அவ்வாற்றல் கூடுவது எங்ஙனம்? என்பது அடுத்து வரும் வினவாகும். கருவிகள் அறிவற்றனவேனும், அறிவுடைய உயிரொடு கூடுதலின் அவற்றிற்கு அவ்வாற்றல் உளதாகும் என்பது அதற்குரிய விடையாகும். அக்கருவிகளால் தொழிற்படுவதையும் பின் அவை நீங்குவதையும் உயிர் அறிய முடியவில்லையே என்பது அடுத்து வரும் வினவாகும். இறைவன் எதனையும் அறிவித்தாலன்றி உயிர் தானே எதனையும் அறிய இயலாது என்பது அதற்குரிய விடையாகும். உயிர்க்கு இறைவனே எதனையும் அறிவிப்பனெனின் அவன் உயிர்க்குக் கருவியாவன்; உயிரே தலைமையுடையதாகும். அன்றியும் அவ்வாறு அறிவிக்கும் இறைவனையும் அறியும் உயிரையும் அறியப்படும் பொருளையும் உயிர் என்றும் அறிய இயல வில்லையே? என்பது அடுத்து வரும் வினவாகும். உயிர் தன் வசம் இன்றித் திருவருள் வயப்பட்டு நிற்பின் இவ்வனைத்தையும் காணலாம் என்பது அதற்குரிய விடையாகும். 'மாயப் படலங் கிறித்தூய, ஞான நாட்டம் பெற்றேன், பெற்றபின் தன்னையும் என்னையும் கண்டேன்' (திருவிடைமருதூர்-13),'அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத் தூரியனும் சிவம் தோன்றும் தானும் தோன்றும் (சித்தி- 8 - 28) என வருவனவும் காண்க.

9. கடலமுதே வெண்ணெய்க் கரும்பேஎன் கண்ணே
உடலகத்து மூலத்து ஒடுங்கச் - சடலக்
கருவியாது ஆங்குணர்த்தக் காண்பதுதான் என்னை
மருவியாது என்றுரைக்க மன்.

(தெ-ரை) அருளாரமுதப் பெருங்கடலே! திருவெண்ணெய் நல் லூரில் எழுந்தருளியிருக்கும் கரும்பே! அடியேனது கண்ணே! எடுத்த உடலிடத்தே மூலாதாரத்தில் ஒரு கருவிகளுமின்றி யான் ஒடுங்குமிடத்து உடலிடத்துள்ள எக்கருவிகொண்டு யான் என்னைக் காண இயலும்? அப்பொழுது யான் எதனெடு பொருந்தியுள்ளேன்? எனக்கருளுவாயாக என்பதாம்.

'கனியினும் கட்டிபட்ட கரும்பினும் இனியன்' எனவும், 'தேனுய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்' எனவும் அருளா ளர்கள் தம்மனுபவத்தால் நுகர்ந்தவாறு கூறுதல் காண்க. மூலா தாரத்தில் உயிர் மட்டும் இருக்கும் நிலை உயிர்ப்படங்கல் எனப் படும். இந்நிலையில் உயிர் எதனைக் கொண்டு அறியும் எதனெடு பொருந்தி நிற்கும் என்பது வினு. இந்நிலையில் இருக்கும் உயிரைக் கருவிகளொடும் கூட்டி உணரச் செய்வது திருவருளேயாகும் என் பது அதற்குரிய விடையாகும். இதனைப் போற்றிப் பஃறொடையால் நன்கு அறியலாம். ஆங்கு உணர்த்த சடலக்கருவியாது? மருவிக் காண்பதுதான் என்னை எனக் கூட்டுக. மன்அசைநிலை.

10\. மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
அந்நிய மாக்கி அருள்வழி அதனுல்
என்னுள் புகுந்தனை எனிலே முன்னைத்
திரிமலம் தீர்த்த தேசிக நின்னேடு
ஒருவுதல் இன்றி உடந்தையே ஆகும்
பெருநிலை ஆகல் வேண்டும் மருவிடும்
மும்மலம் அதனுல் எம்முள்நின் றிலை எனின்
அம்மலத் திரிவும் செம்மலர்த் தாள்நிழல்
சேர்தலும் இலவாய்ச் சார்பவை பற்றிப்
பெயர் விலனுகும் பெரும நீர்வின்று
அமைந்த கருமத்து இசைந்தவை அல்லது
சமைந்தன இலவெனச் சாற்றின் அமைந்த
மாயேயம் கன்மம் மாமலம் மூன்றும்
மாயா தாகவே யார்ச்சந மாயையின்
உற்பவம் தீராது ஒழுகும்ஒன்று ஒன்றின்
நிற்சம மாயின் அல்லது நிற்பெறல்
இல்லெனு மொழிந்த தொல்லறம் தனக்கும்
ஏயா தாகும் நாயேன் உளத்து
நின்றனை என்பனே நின்றிலை என்பனே
பொன்றிய பொன்றிற் றிலமலம் என்பனே
ஒன்றினை உரைத்தருள் மன்ற குன்றுப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க்கு அதிபதி
கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண்டு என்வினை வேரறப் பறித்த
மெய்கண்ட தேவே வினையிலி
மைகொண்ட கண்ட வழுவில் என்மதியே.

## உரை நடை

இங்ஙனம் கூறின குற்றங்களற்ற குணம் பொருந்திய மரகதத்தை அணிபவர், நால்வகைச் சேனைகளோடு வாழ்நாளும் பெருக வாழ்வர்.

5. நீலம்

நீலம் இந்திர நீலம், மாநீலம் என இருவகைப்படும். இந்திரன் விச்சுவரூபனைக் கொன்ற பழியினைப்போக்கும் பொருட்டுச் செய்த அசுவமேத யாகத்தில் எழுந்த நறுமணப் புகையானது குதிரையின் இமையாத கண்ணுள் நுழைந்து பீளையினைச் சிந்தச் செய்தது. அப் பீளை சிந்திய இடத்தினின்றும் தோன்றிய மணி நீலம் ஆகும். இஃது இந்திர நீலம் எனப் பெயர்பெறும். சூரியனின் மனைவியாகிய சஞ்சை என்பவள் தன் கணவனின் தழல் வடிவான உடலினைத் தழுவப் பெறுமல் அஞ்சித் தனது உடல் நிழலினைத் தனது வடிவமாக (சாயா தேவியாக) நிறுத்திக் காட்டினை அடைந்து தவம்செய்தாள். அதனைச் சூரியன் ஞானத்தால் உணர்ந்து அவள் பின் தொடர்ந்து செல்ல, அது கண்டு சஞ்சை அஞ்சிப் பெண் குதிரை வடிவாக ஓடினுள். சூரியனும் ஆண் குதிரை வடிவாய் அவளைப் பின் தொடர்ந்து சென்று காமத்தைப் பொறுக்கலாற்ருது இந்திரியத்தைச் சிந்தினன். அவ் விந்திரியம் சிந்திய இடங்களில் தோன்றிய மணி நீலம் ஆகும். இது மாநீலம் எனப் பெயர்பெறும். இம் மாநீல மணியினை வானவர்களும் மனிதர்களும் விரும்பி அணிவர்.

மாநீல சாதியின் வகையும் பயனும்

மாநீலம் பிறிதொன்றும் கலவாத வெண்மை, செம்மை, பொன்மை, கருமை ஆகிய இந்நிறம் பொருந்தும்; இவை முறையே அந்தணர் முதலிய நால்வகைச் சாதியினருக்கும் உரியதாகும். மாநீலத்தை அணிபவர் எந்நாளும் நலங்கள் எய்தி வாழ்ந்திருப்பர்.

மாநீலத்தினும் பதினுயிர மடங்கு பெருவிலையினை உடையது இந்திர நீலமாகும். அதனைப் பசுவின் பால் நிறைந்த குடத்திலிட்டால் அப்பாலின் நிறத்தைக் கீழ்ப்படுத்தி நூறுமடங்கு தன் நீலநிறம் மேம்பட்டு ஒளி விளங்கச் செய்யும். இந்த இந்திர நீலம் உலகில் கிடைப்பது மிக அரியது.

நவமணிகளில் மாணிக்கம், முத்து, வயிரம், மரகதம், நீலம் என்னும் ஐந்தும் மிக்க ஒளியும் பெருவிலையும் உடையன. கோமேதகம், புருடராகம், வயிடூரியம், பவளம் ஆகிய நான்கும் மிக்க ஒளியினையுடையவேனும் சிறிய விலையுடையன. யாவும் மக்களால் விரும்பப்படுவன ஆகும்.

6. கோமேதகம்

வலாசுரனுடைய நிணங்கள் சிந்திய இடத்தினின்றும் தோன்றிய மணி கோமேதகம் ஆகும். இஃது உருக்கிய நெய்த்துளி, தேன் துளி, கோசலம் (பசுவின் சிறுநீர்) ஆகிய இவற்றை ஒத்துச் சிவந்து பசும் பொன்னின் நிறத்தையும் பெற்று மேன்மையாய்த் தூயதாய்த் திண்மைபெற்று விளங்கும். இதனை அணிந்தால் அஞ்ஞானத்தா லாகிய பாபம் நீங்கித் தூய்மை உண்டாகும்.

7. புருடராகம் (புட்பராகம்)

வலாசுரனுடைய கபம் விழுந்த இடத்தினின்றும் தோன்றிய மணி புருடராகம் என்றும், பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதலத்தில் சென்று ஒளித்த இரணியாக்கனின் உயிரைப் பருகிய திருமாலாகிய வெள்ளைப்பன்றி, வாயினைத் திறந்து நகைத்துக் கத்தியதால் பொன் போல் சிதறிவிழ்ந்த கபம் பொருந்திய தீவில் தோன்றிய மணி புருடராகம் என்றும் கூறப்பெறும். அஃது உச்சியில் வட்டவடிவமாய் மெல்லியதாய்ப் பொன்போலவும் தீப்போலவும் சுற்றிலும் ஒளிவீசிக் கண்டோர் மனத்தைக் கவரும் பொலிவுடையதாய் விளங்கும். இப் புருடராக மணி பாரியாத்திர மலையின் சிகரமாய் விளங்கும்; மந்தர மலையின் புறத்தில் மேகலைபோலவும் திகழும். இம்மணியினைக்கொண்டு தேவதச்சன் தேவேந்திரனுடைய நகரத்தையும், அரசாட்சி மண்ட பத்தையும் அமைத்தான். இதனை அணிபவர் பகைவர்களை வென்று வெற்றிமாலை சூட வல்லவராவர்,

8. வயிடூரியம்

வலாசுரனுடைய மயிராகிய வயிடூரியம் இளாவிருத கண்டத்தில் முதலில் தோன்றியது; இப்போது வயிடூரியம், கோரக்கம், மகதம், சிங்களம், பாரசீகம், பொதியமலை, திரிகூடம் முதலாய இடங்களிலும் பிற தீவுகளிலும் உண்டாகிறது; அன்றியும் அலைகடலிலும் மேகங்கள் இடிக்கும்போதும் தோன்றும்.

வயிடூரியத்தின் நிறம்

வயிடூரியம் மூங்கிலின் இலை, மயிலின் கழுத்து, பூனையின் கண் ஆகிய இவற்றில் ஒன்றன் நிறத்தினைக்கொண்டு கனத்ததாயும் தெளி வுள்ளதாயும் திண்ணியதாயும் மெலியதாயும் விளங்கும்; வலம்,இடம், மேல், கீழ் என்ற நான்கு இடங்களிலும் ஒளி வீசும். இவை முறையே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வருக்கும் உரியன வாகும். அறிவுடையோர் இம்மணியினை நாடோறும் பூசித்து அணியக் கடவர்,

9. பவளம்

வலாசுரனுடைய தசை வீழ்ந்த இடத்துத் தோன்றிய மணி பவளம் ஆகும். இது, பிரமன் தன் உடலை விடுத்துச் சந்திக்கால வடிவமாக இருந்து பிதிரரைப் படைக்கும்பொழுது அவனது உடலின் அழுக்கு வீழ்ந்த இடத்திலும், திருமால் மது கைடவர்களைச் சேதித்த இரத்தம் ஒழுகிய இடத்திலும், இந்திரன் மலைகளின் சிறகு அரிந்த இரத்தம் சிதறிய இடத்திலும் வந்து குடிகொண்டு விளங்கும்.

பவளத்தின் நிறம் முதலியன

பவளம் முருக்கமலர், பச்சைக்கிளியின் மூக்கு, செவ்வரத்தமலர் கொவ்வைக்கனி ஆகிய இவற்றில் ஒன்றன் நிறத்தைப்பெற்றுவிளங்கும் திருகிக்கோணுதல், புழு அரித்தல், முகம் ஒடிதல் பவளத்தின் குற்றங் களாகும்.

பவளம் பெரும்பாலும் பெண்களே தரித்தற்கு உரியது. இதனை அணியும் பெண்களுக்கு மகப்பேறு முதலான பயன்கள் யாவும் உண்டாகும்.

சூரியன் முன் தீயை உமிழும் சூரிய காந்தக் கல்லும், சந்திரன் முன் நீரைச் சிந்தும் சந்திர காந்தக் கல்லும் இந்த நவமணிகளுள் ஒன்றன் உட்கிடையாக அடங்கித்திகழும்.

நவமணிகளின் சாதி

வயிரமும் முத்தும் அந்தணர் சாதி; பவளமும் மாணிக்கமும் அரசர் சாதி: புருடராகமும் (புட்பராகம்) வயிடூரியமும் கோமேதகமும் வணிகர் சாதி; நீலமும், மரகதமும் வேளாளர் சாதி.

நவமணிகளின் முக்குணங்கள்

முத்தும் பச்சையும் சாத்துவிக குணம் உடையன; பளிங்கு மணி யும் சாத்துவிக குணமுடையது. பவளமும் மாணிக்கமும் கோமேதக மும் புருடராகமும், வயிடூரியமும், வயிரமும் இராசத குணம் உடை யன. நீலம் தாமத குணம் உடையது.

நவ மணிகளை மதிப்பிடும் நாட்கள்

மாணிக்கத்தையும் கோமேதகத்தையும் ஞாயிற்றுக் கிழமை யன்றும், முத்தையும் வயிடூரியத்தையும் திங்கட்கிழமையன்றும், பவளத்தைச் செவ்வாய்க்கிழமையன்றும், மரகதத்தைப் புதன்கிழமை யன்றும், புருடராகத்தை வியாழக்கிழமையன்றும், வயிரத்தை வெள்ளிக்கிழமையன்றும் நீலத்தைச் சனிக்கிழமையன்றும் ஆராய்ந்து மதிப்பிட்டுப் பார்த்தல் மிக நன்றாம். இவற்றை உள்ளும் புறமும் தூய்மையாய் அறநெறியில் செல்பவரே ஆராய்ந்து கூறுவதற்கு உரியவர் ஆவர்.

நவ மணிகளை வழிபடும் முறை

செந்தாமரை மலர், சிறு சண்பக மலர், செவ்வல்லி மலர், செங்காந்தள் மலர், மல்லிகை மலர், வெண்டாமரை மலர், மர மஞ்சள் மலர், செங்கழுநீர், வெள்ளை மந்தார மலர் ஆகிய இம்மலர் களைத் தம் முடியிற் சூடிக்கொண்டு ஓர் இடத்தைத் தூய்மை செய்து, ஆதவத்தை இட்டு அதன்மேல் வெள்ளிய ஆடை ஒன்றை விரித்து மாணிக்கத்தை நடுவிலும் முத்து முதலிய மணிகள் எட்டினை யும் கிழக்கு முதல் எட்டுத் திசைகளிலும் முறையே வலப்பக்க மாகச் சூரிய மண்டலம் போலச் சூழ வைத்து, மாணிக்கம் முதலாகிய ஒன்பது மணிகளின்மேலும் ஒன்பது கிரகங்களைத் தாபித்து முற்கூறிய செந்தாமரை மலர் முதலிய ஒன்பது மலர் களையும் சாத்தி விதிமுறை தவருமல் வழிபடவேண்டும்.

இறைவனுகிய வணிகர் மாணிக்கங்களை அளித்து மறைதல்

இவ்வாறு இறைவனுகிய வணிகர் ஒன்பதுவகை இரத்தினங்களைப் பற்றித் தனித்தனியே எடுத்துக் கூறினர். பின்னர் அவர் வடக்குத் திசையினை நோக்கி இருந்து இரத்தினங்களை வணங்கித் துதித்துப் பூசித்து மணிகளைக் கையிலெடுத்துச் சோமசுந்தரக் கடவுளை எதிர் நோக்கி அஞ்சலித்துத் திருவுளக் குறிப்போடு. ''இவ்வரசிளங் குமர னுக்கு அளவற்ற வாழ்நாளும் செல்வமும் ஓங்குக'' என்று வாழ்த்திவழங்கியருளினர்; அரசகுமாரனும் விண்ணிழி விமானத்தை நோக்கிச் சொக்கலிங்க மூர்த்தியின் திருவடிகளைப் பணிந்த வண்ணம் இரு கைகளையும் விரித்து மகிழ்வுடன் வணங்கினன். அப்பொழுது வணிகராய சோமசுந்தரக் கடவுள் அரசிளங்குமரனையும் அவனைச் சூழ்ந்து நின்ற மந்திரிகளையும் முக மலர்ச்சியுடன் நோக்கி, ''இந்த ஒன்பது வகை மணிகளைக் கொண்டு புதிய மகுடம் செய்து முடி சூட்டி, இவ்வரசிளங் குமரனுக்கு அபிடேக பாண்டியன் என்று பெயரிட்டு அழைப்பீராக'' என்றுர். அப்பொழுது செம்பொன்னைத் துலையால் தூக்கி வணிகருக்கு விலை கொடுப்பதற்கு வருகின்ற அமைச் சர்கள், அரசகுமாரன்மேல் அருள்நோக்கினை மிகச் செலுத்திப் புன்னகை தவழநின்ற வணிகேசரை அவ்விடத்தில் காணுது திகைத்து நின்றனர்; உடனே வணிகர் பெருமான் இடபத்தின் மீது உமா தேவியாரோடு இரண்டு திருவுருவமாய் முக்கண்ணும் நான்கு திருக் கரமும் நீலகண்டமும் தோன்றச் செய்து தம் திருக்கோயிலினுட் போதலைக் கண்டனர்; இப்பூமியில் வணிகராய் வந்தவர் சிவபெரு மானே என்பதை அறிந்த அரசிளங் குமாரனும் அமைச்சர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றனர்.

அரசகுமாரன் கடவுளை துதித்தல்

அரசிளங் குமரன் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று பணிந்து எழுந்து தன் சிவந்த கைகளைத் தலைமேற் குவித்த வண்ணம் ''எம்பிரானாகிய தேவரீருக்கு அடியவன் செய்யத்தக்க கைம்மாறு ஒன்று உண்டோ? அடியேனுடைய உடல், பொருள், ஆவி இம் மூன்றும் உம்முடையனவே ஆகும்; மேலும், வான் செய்யும் நன்றிக்கு வையகத்தோர் செய்யும் கைம்மாறு உண்டோ?'' என்று துதித்தான்.

சான்றோர் இளவரசனை வாழ்த்துதல்

அப்போது வீரபாண்டியன் புதல்வனை அங்கிருந்த பெரியோர்கள், ''வீரமகள் விரும்பும் இவ்வழுதிக்கு மனம் வாக்கிற்கு எட்டாத மதுரைநாதன் மணிமுடிக்கு நவமணிகளையும், அளித்தமையால் இவன் அளவற்ற காலம் புவியில் செங்கோல் செலுத்துவான்'' என்று வாழ்த்தினார்கள்.

அரச குமாரன் அரண்மனையை அடைதல்

பின்பு, அரசிளங்குமரன் துதித்துத் திருக்கோயிலை வலம் வந்து எட்டு யானைகளால் சுமக்கப்பெற்ற இந்திர விமானத்தில் எழுந்தருளிய சொக்கலிங்கப்பெருமானின் அருள்விடைபெற்று முனிவர்கள் ஆசி கூற அரண்மனையை அடைந்தான்.

நவமணிகளைக்கண்டு யாவரும் வியத்தல்

நவமணிகளின் குணங்களை ஆராய்ந்தறியும் வல்லுநர்களும் அமைச்சர்களும் மணிகளைக்கண்டு வியப்புற்று ''முருகக்கடவுளைப் போலவந்த வணிகர் சோமசுந்தரக்கடவுள் எனில் அவர் நாட்களையும் கோள்களையுமே பிடித்து நவமணிகளாகச் செய்து நல்கி அருளினாரோ? அன்றித் தம் தாள்களிலும் தோள்களிலும் மார்பிலும் அணிந்துள்ள நீண்ட நாகங்கள் அளித்த மணிகளைத் தந்தருளினாரோ? யாதென்று கருதுவோம்; இம் மணிகள் இந்திரன் உலகத்திலும் கிடைத்தற்கரியனவே'' என்று கூறி ஐயமுற்று வியந்தனர்.

அரசிளங்குமாரனுக்கு முடிசூட்டல்

அமைச்சர்கள், மயனைக்காட்டிலும் சிற்பநூல்வல்ல பொற்கொல்லர்களை அழைத்து அவர்கள் மன மகிழப் பல வரிசைகளை நிறைய அளித்து அம் மணிகளைக் கொடுத்து அரசகுமாரனுக்கு மகுடம் செய்வித்தனர்; ஒரு சிறந்த நன்னாளில் மணிமகுடத்தை அரசிளங் குமாரனுக்குச் சூட்டி, ''அபிடேக பாண்டியன்'' எனப் பெயரிட்டனர்.

அபிடேக பாண்டியன் சகல சிறப்புடன் நகர் வலம் வந்து சோம சுந்தரக்கடவுளின் திருவடிகளை வணங்கித் தன் அரண்மனை அடைந் தான்.

அபிடேக பாண்டியன் ஆட்சிபுரிதல்

வீர மகளுக்கு உறைவிடமாகிய தோள்களையுடைய அபிடேக பாண்டியன் பகைவர்களை வென்று, மழைபொழிந்து உயிர்களைக் காக்கும் முகில்போலக் கருணைமிகுந்து உலகத்தை ஆண்டுவந்தான் அப்போது அபிடேக பாண்டியன், தன் தந்தையின் காமக்கிழத்தியர் பெற்ற புதல்வராய்த் தனக்கு மூத்தவர்களாய், முன்னுளில் தன் கருவூலத்தில் முடி முதலிய பொருள்களைக் கவர்ந்து அதனுல் அஞ்சியவர்களாய் வேற்றூரில் புகுந்து ஒளித்த பகைவரைச் சிலர் பிடித்துக் கொண்டுவந்து விடுக்க, அவர்கள் கவர்ந்த பொருள்கள் அனைத்தையும் திரும்ப வாங்கிக்கொண்டான்.

செய்யுள் — 93
ஆகச் செய்யுள் — 1287

## 18. வருணன்விட்ட கடலை வற்றச்செய்த படலம்

அபிடேக பாண்டியன் சோமசுந்தரக்கடவுளைப் பூசித்தல்

அபிடேக பாண்டியன் சித்திரை மாதத்துச் சித்திரை நட்சத் திரத்தில் வெள்ளியம்பலத்துள் ஆடும் பெருமானுகிய சொக்கலிங்கக் கடவுளுக்கு எல்லையற்ற பேரன்போடு சிவாகம விதிப்படி பூசைப் பொருள்கள் பலவற்றை அளித்து விசேடபூசை செய்யத் தொடங்கி நறுமணங்கமழும் நெய் முதலாக சந்தனம் ஈருக அபிடேகஞ் செய்த பின்பு பச்சைக்கர்ப்பூர நீரினுல் அபிடேகித்து அச்சோமசுந்தரக் கடவுளை வியப்புடன் தரிசித்து வணங்கி, ''எறிநீர் வையைத் துறையையுடைய பெருமானே! நீர் அடியேனுடைய கர்ப்பூர சுந்தரரேயோ' என்று கூறித் துதித்தான்.

இங்ஙனம் அபிடேக பாண்டியன் பூசை செய்யும் பொழுது ஆண்டுகள்தோறும் சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில் வந்து பூசிக்கும் நியமம்பூண்ட இந்திரனுனவன், அப்பாண்டியனது பூசை முடியும்வரையில் தாமதித்து நின்று முடிந்தபின் பூசையினைச் செய்து முடித்துக்கொண்டு தன் சுவர்க்கத்துக்குச் சென்ருன்.

வருணனும் இந்திரனும்

அப்பொழுது வருணதேவன், தன் நோய்நீங்கும் காலத்தின் நிகழ்ச்சி கைகூட இந்திரனுடைய சபையையடைந்துநின்று இந்திரனை

நோக்கி, ''நீ இன்று சிறிது வருத்தமுற்றிருக்கின்றாய்; இதற்குக் காரணம் யாது'' என்று வினவினான். அதற்கு இந்திரன், ''மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற அன்பு வலையில் அகப்படும் சொக்கலிங்கப் பெருமானைப் பூசை புரிய இன்று பாண்டியனால் காலந் தாழ்ந்தது; அதனால் இப்போது என் உள்ளம் சிறிது அலைவுறத் துன்பமெய்தியதுண்டு'' என்றான். அதுகேட்ட வருணன், ''அச்சொக்கலிங்கம் தான் மற்றைய தலங்களின் இலிங்கங்களைவிடச்சிறந்த இலிங்கமோ?'' என்று வினவினான். இந்திரன், ''முன்னாளில் என்னுடைய பிரமப் பழியையும், வெள்ளையானையின் சாபத்தையும் ஸ்ரீச் சிவலிங்கமூர்த்தியே போக்கியருளினாரல்லவா ? அதனை நீ அறியாயோ ?'' என்றான். அதற்கு வருணன். '' அங்ஙனமாயின் தெய்வ மருத்துவர்களாலும் தீர்க்கப்படாததாய் என்னை வருத்துகின்ற பெரிய வயிற்று நோயை அச் சிவலிங்கமூர்த்தியால் போக்க முடியுமோ? என்று வினவினான். இந்திரன் புன்னகைசெய்து ''நீ இத்தகைய சந்தேகங்கொண்டு வினவியது என்னை?'' பிரம விட்டுணுக்களாலும் தீர்க்கமுடியாத பிறவி நோயினைத் தீர்க்கவல்ல சொக்கலிங்கமூர்த்தி இந்த உடலிலுள்ள பெரிய பிணியையும் பிற நோயையும் தீர்ப்பதற்கு அரியவரோ? எம்பெருமான் செய்யும் திருவிளையாடலை இப்பொழுதே விளங்க நீ சோதிப்பாய்'' என்று கூறினான். உடனே வருணன் "இந்திரனே! நான் இங்கு வரும்பொழுது காமதேனுவும், அதன் கன்றும் வழியில் எதிர்ப்பட்டன. அப்பொழுது கண்ட அந்த நற்சகுனத்தால் இந்த நன்மொழியினைக் கேட்டேன்'' என்று கூறியவாறு விடைபெற்றுச் சென்றான்.

### கடல் வெள்ளம் மதுரையை அழிக்கவருதல்

பிறகு வருணதேவன், வெள்ளி மன்றினுள் ஆடும் பெருமானின் திருவிளையாடலைக்கண்டு தன் வயிற்று நீர் நோயினைப் போக்கிக்கொள்ளக் கருதிக் கடலினை விரைந்து அழைத்து. ''நீ மதுரை நகரமுழுவதையும் அழிப்பாயாக'' என்று ஏவினான். உடனே கடல் பொங்கி மேலெழுந்தது; அப்போது மரங்கள் முறியும்படி கல்லி எடுத்து ஆரவாரித்து எல்லாத் திசைகளிலும் வீசியது; மலைகளையெல்லாம் அகழ்ந்து பொடிசெய்து திசைப்புறங்களில் செல்லும் வண்ணம் எறிந்தது; மாட வரிசைகளைப் பெயர்த்து வீசியது. இங்ஙனம் கடல் ஊழிக்காலத்தில் பொங்கி மேலெழுந்துவருதல் போலப்பெருக்கெடுத்து வாரா நின்றது.

அதுகண்ட தேவர்களெல்லாம் வருணன் செய்த சூழ்ச்சியினை அறியாதவர்களாய், ''பிரம கற்பத்தினும் அழியாத இம் மதுரை நகரத்திற்கும் அழிவு வந்தது; இனி எமது நகரத்திற்கு அழிவுகாலம் வந்தது போலும்'' என்று எண்ணிக் கலங்கிய உள்ளத்தோடு வந்து

சோமசுந்தரக் கடவுளை வணங்கினர். மதுரை மாநகரத்து உள்ளார் எல்லாரும் ''இது சூலமொடு அழலேந்தும் சொக்கர் திருவிளையாட்டோ? அன்றி, நாம் செய்த தீவினையின் பாகுபாடோ? தேவர்களை அழிக்கவந்த ஆலகாலமோ? உலக முழுதும் அழியும்படி வரும் பேரூழிக்காலமோ?'' என்று பலவாறு கூறி மனங்கலங்கி நடுங்கினர். பூமியும் திக்குக்களும் புதையும் வண்ணம் பேரிருள்போல் வரும் கடல் மதுரைத் திருநகரின் புறத்தில் சூரியனும் அச்சத்தால் கண்ணை மூடுமாறு வரும்போது அபிடேக பாண்டியன் அதனைக்கண்டு மிக நடுநடுங்கி, ''சிவபெருமானுடைய திருவடிகளே புகலிடம்'' என்று துணிந்து, பாற்கடலினின்றும் தோன்றித் தேவர்களைக் கொல்லவந்த நஞ்சினைக் கண்டு அஞ்சிய திருமால் போலவும், உயிரைக் கவரவந்த இயமனைக்கண்டு அஞ்சிய மார்கண்டனைப் போலவும், சோம சுந்தரக் கடவுளின் திருவடிகளில் சென்று விழ்ந்து, ''ஓலம், ஓலம்'' என்று முறையிட்டான்.

சிவபெருமான் கடலை வற்றச்செய்தல்

அப்போது முறையிட்டு வருந்திய அபிடேக பாண்டியன் முன் சோமசுந்தரக்கடவுள் புன்னகை புரிந்து ''அஞ்சாதே அஞ்சாதே!'', என்று திருவாய்மலர்ந்து தமது திருச்சடையில் உள்ள நான்கு மேகங்களையும் நோக்கி, ''இம் மதுரைமா நகரத்தை அழிக்கவரும் கடலை அது வற்றும்வண்ணம் நீங்கள் விரைந்து போய்ப் பருகுங்கள்'' என்று பணித்தருளினர். உடனே அந் நான்கு மேகங்களும் நிமிர்ந்து முழுங்கிக் கடல்நீரை வாரி உறிஞ்சின. அங்ஙனம் உறிஞ்சிய அளவிலே அக்கடல் சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்று தெளிந்த மெய்யன்பர்களுடைய எழுவகைப் பிறவிக்கடல் வற்றுதல்போலப் பசையற வறந்தது. அப்பொழுது நகரமக்களும், தேவர்களும் அபிடேக பாண்டியனும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை நோக்கிப் பெருமகிழ்ச்சியுற்றுப் பலமுறை புகழ்ந்து பாடி அளவிலா இன்பக் கடலில் ஆழ்ந்தார்கள்.

செய்யுள் — 19
ஆகச் செய்யுள் — 1306

மதுரைக் காண்டம் முற்றிற்று.

———

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்.

ரௌத்திரி ஸ்ரீ புரட்டாசி மீ (1980 செப்டம்பர்—அக்டோபர்)

நாள், திதி, நட்சத்திரக் குறிப்பு (மணிக்கணக்கில்)

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | (16—9—80) | செவ்வாய் | சப்தமி நாள் முழுவதும் | அனுஷம் 15-12 |
| 2 | (17—9—80) | புதன் | சப்தமி 6-54 | கேட்டை 17-03 |
| 3 | (18—9—80) | வியாழன் | அஷ்டமி 7-44 | மூலம் 18-13 |
| 4 | (19—9—80) | வெள்ளி | நவமி 7-51 | பூராடம் 18-39 |
| 5 | (20—9—80) | சனி | தசமி 7-09<br>ஏகாதசி 29-40 | உத்திராடம் 18-17 |
| 6 | (21—9—80) | ஞாயிறு | துவாதசி 27 28 | திருவோணம் 17-10 |
| 7 | (22—9—80) | திங்கள் | திரயோதசி 24-37 | அவிட்டம் 15-22 |
| 8 | (23—9—80) | செவ்வாய் | சதுர்த்தசி 21-17 | சதையம் 13-00 |
| 9 | (24—9—80) | புதன் | O பௌர்ணமி 17-38 | பூரட்டாதி 10-15 |
| 10 | (25—9—80) | வியாழன் | பிரதமை 3-49 | உத்திரட்டாதி 7-16<br>ரேவதி 28-15 |
| 11 | (26—9—80) | வெள்ளி | துவிதியை 10-01 | அசுவனி 25-23 |
| 12 | (27—9—80) | சனி | திரிதியை 6-25<br>சதுர்த்தி 27-12 | பரணி 22-51 |
| 13 | (28—9—80) | ஞாயிறு | பஞ்சமி 24-13 | *கார்த்திகை 20-49 |
| 14 | (29—9—80) | திங்கள் | சஷ்டி 22-28 | ரோகணி 19-24 |
| 15 | (30—9—80) | செவ்வாய் | சப்தமி 21-10 | மிருகசீரிஷம் 18-43 |
| 16 | ( 1-10—80) | புதன் | அஷ்டமி 20-38 | திருஆதிரை 18-48 |
| 17 | ( 2-10—80) | வியாழன் | நவமி 20-51 | புனர்பூசம் 19-37<br>காந்தி அடிகள் பிறந்த நாள் |
| 18 | ( 3-10—80) | வெள்ளி | தசமி 21-46 | பூசம் 21-06 |
| 19 | ( 4-10—80) | சனி | ஏகாதசி 23-15 | ஆயில்யம் 23-08 |
| 20 | ( 5-10—80) | ஞாயிறு | துவாதசி 25-10 | மகம் 25-35 |
| 21 | ( 6-10—80) | திங்கள் | திரயோதசி 27-24 | பூரம் 28-20 |
| 22 | ( 7-10—80) | செவ்வாய் | சதுர்த்தசி 29-49 | உத்திரம் நாள் முழுவதும் |
| 23 | ( 8-10—80) | புதன் | ● அமாவாசை நாள் முழுவதும் | உத்திரம் 7-15 |
| 24 | ( 9-10—80) | வியாழன் | அமாவாசை 8-28 | அஸ்தம் 10-15 |
| 25 | (10-10—80) | வெள்ளி | பிரதமை 10-51 | சித்திரை 13-15 |
| 26 | (11-10—80) | சனி | துவிதியை 13-17 | சுவாதி 16-11 |
| 27 | (12-10—80) | ஞாயிறு | திரிதியை 15-36 | விசாகம் 18-58 |
| 28 | (13-10—28) | திங்கள் | சதுர்த்தி 17-39 | அனுஷம் 21-30 |
| 29 | (14-10—80) | செவ்வாய் | பஞ்சமி 19-22 | கேட்டை 23-41 |
| 30 | (15-10—80) | புதன் | சஷ்டி 20-36 | மூலம் 25-23 |
| 31 | (16-10—80) | வியாழன் | சப்தமி 21-14 | பூராடம் 26-29 |

சிவ சிவ

# 'ஸ்ரீ குமர குருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளிவரும்
சமய இலக்கியத் திங்கள் இதழ்

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா ) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

## விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர், 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினவெண்பாவும் | ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு ( கோ. வன்மீகநாதன் ) | | விலை ரூ. | 15—00 |
| தொல்காப்பியம் – நன்னூல் – எழுத்ததிகாரம் (வித்துவான் க. வெள்ளைவாரணனார்.) | | விலை ரூ. | 10—00 |
| திருவருட்பயன் – நிரம்ப அழகிய தேசிகர் உரையும், திரு. க. வெள்ளைவாரணனார் எழுதிய உரை விளக்கமும் | | விலை ரூ. | 5—00 |

ஒவ்வொன்றிலும் 20 பிரதிகளுக்குக் குறையாமல்
வாங்குவோருக்கு 20% கழிவு உண்டு.

தபாற்கட்டணம் தனி. 1000 ரூபாய்க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம். நூல்கள் கிடைக்குமிடம்:-

நிர்வாக ஆசிரியர், 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள். அ. கு. எ. 612 504
( தஞ்சை மாவட்டம் )

---

ஸ்ரீகாசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி :- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504